## முக்குணவியல்.

உ
கணபதிதுணை.
திருச்சிற்றம்பலம்.
அரிஓம்நம:

# சிவதூஷண பரிகாரம்.

## விநாயகர்துதி.

### அறுசீரடி ஆசிரியவிருத்தம்

ஓங்குமொரு மருப்பானை யுயிர்க்குயிரா யிருப்பானை யுரகவேந்தன், றங்குநெடு நிலத்தானை முகத்தானை வதைத்தானைச் சயிலமானைப், பாங்கில்வைத்து மழுத்தானைப் பரித்தான்றந் தளித்தானைப் பசும்பொற் கோட்டுப், பூங்கமலப் பதத்தானைப் பொருவிலைந்து கரத்தானைப் போற்றல் செய்வாம்.

## சிவதுதி.

ஆதிநடு முடிவிலதா யானந்த மயமாகி யகண்டமாய்ச் சுகரு, சோதிவிடு சுடாவடிவாய்ச் சுருதிகளின் முடிவோத் துதித்துப் போற்றச், சாதிகுணங் குறிகளின்றிச் சராசரங்களனைத்தினையுஞ் சார்ந்துஞ் சாரா, தேதிகழ்தற் பரப்பொருளை தெப்பொருளைப் பொருளினையா மிறைஞ்சல் செய்வாம்.

## சிவசத்திதுதி.

### கலிவிருத்தம்

தாதரிவைப்போலத்தண்ணருள்செய்பவள்
வேதாகமத்தின்விளங்கியமெய்ப்பொருள்

ஆதாரசத்திமனோன்மணியம்பிகை
மாதாவின்பதஞ்சிரம்வைத்துவணங்குவாம்.

## குமரக்கடவுள்துதி.

கர்த்தனேயெனப், பந்தமேகிடுஞ்
சிந்தைமேவிய, வந்துசேருமே.

## திருஞானசம்பந்தர்துதி.

கந்தஞ்சம்பந்தனை, அந்தியுங்காலையும்
வந்தனைசெய்திடில், சிந்தனைமுற்றுமே.

## சுந்தரர்துதி.

சுந்தரன்பதமலா, வந்தனைசெய்திடில்
பந்தமுநீங்கிடும், நொந்திடும்வறுமையே.

## திருநாவுக்கரசர்துதி.

பாவப்பழிகடல், நோவற்றிடதிரு
நாவுக்கரையன் நாமந்துதியே.

## வாதவூரர்துதி.

வாதவூராதம், பாததாமரை
நீதலைக்கொளச் சாதலில்லையே

## சிவனடியார் யாரையுந்துதித்தல்.

வேதநாயகன், பாததாமரை
ஓதுவாாபதம், ஓதுநெஞ்சமே.

## பாயிரம்.

உலகங்களெல்லாந் தோன்றிநின் றழிதற்குக் காரணனும், அநாதியிலே ஆணவமலத்திற் கிடந்த ஆன்மாக்கள் நல்வினை தீவினைகளைச் செய்து அவைகளா லுண்டாகிய சுகதுக்கங்களை அநுபவித்தற்குக் காரணனும், தனது அபின்னசத்தி பின்னசத்தியாகிப் பின்பு ஆதிசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தியாகிநின்று, பிரமன், விட்டுணு, உருத்திரன், மகேசன், சதாசிவன், ஆகிய பஞ்சகர்த்தாக்களைத் தோற்றச்செய்வதற்குக் காரணனும், பரமசிவனென்றே வேதாகம புராணாதிகள்கூற, இவைகளைச் சிறிதேனும் விசாரித்தறியாத வயிணவர், சிவபெருமானையும், வேதாகம புராணாதிகளையும், சிவசின்னங்களையும், சிவனடியார்களையும் தூஷணஞ் செய்து வருகின்றார்கள். இவைகளைக்கேட்ட சிவனடியார்கள் அப்போதுக் கப்போது அவர்களைக் கண்டனஞ்செய்து வருகின்றார்கள். இப்போதும் நமதுசெவியிலே சிவதூஷணம் ஏறுகின்றமையால் அதனைத் தாங்கிக்கொள்ளுதல் அரிதாகிச் சிவபெருமானுடைய திருவருளையுஞ், சிவனடியார்கள் திருவருளையுந் துணையாகவே கொண்டு சிவதூஷண பரிகாரத்தையே சொல்கின்றேன்.

### நூல்வழிமுறையும்.
### நூற்பயனும்.

வேதம், ஆகமம், புராணம், தேவாரம், பாரதம், இராமாயணம், திருவாய்மொழி முதலானவற்றையே பிரமாணமாக்கி, வயிணவர் கூறுஞ் சிவதூஷணத்தைப் பரிகாரஞ்செய்கின்றேன். அன்றியும் இந்நூலால், விட்டுணுவைச் சிவனுக்குச் சமானமாகவேகூறுஞ் ஸ்மார்த்தர்களும், சிவனுக்குமேலாகவே கூறும் வயிணவர்களும் கண்டிக்கப் படுவார்கள். சைவர்கள், மேலும் மேலும் சைவசமயத்திலே சிரத்தைவைத்து எச்சமயத்திலும் மெய்ச்சமயம் சைவசமயமென்றெண்ணி மேலான சைவத்துறையிலே நின்று எவர்களும் அடைதற்கரிய மேலான சிவலோகத்தை அடைவார்கள்.

---

### நூல்.
## வேதாகமவியல்.
### அளவை.

ஒருபொருளை அளந்துகொள்வது ஆறுஅளவைகளால்.

### அவைகளெவைகளெனில்.

வேதாகமம் முதலான நூல்களினாலும், கண்களினாலும், அனுமானங்களினாலும், உவமானங்

களினாலும, அருததாபத்திகளினாலும், அபாவங்களினாலும் என்றறிக. விரிக்கின் மிகப்பெருகும்.

சிவஞானசித்தியார்.

அளவைகாண்டல் கருதலுரையபாவம் பொருளொப்பா றென்பா, ரளவை மேலுமொழி புண்மையை தீகத்தோடியல் பெனகான், களவைகாண் பரவையிற்றின் மேலுடறை வரவையெல்லா, மளவைகாண்டல் கருதலுரை யென்றிம்மூன்றி னடங்கிடுமே.

முதனூல்.

வேதாகமங்கள் சிவபெருமானாலே அருளப்பட்டனவாம், ஆதலால் இவ்விரண்டும் முதனூல்களெனப்படும்.

திருமந்திரம்.

வேதமோடாகமமெய்யாமிறைவனூ
லோதும்பொதுவுஞ்சிறப்புமென்றுன்னுக
நாதனுரையவைநாடிலிரண்டந்தம்
பேதமதென்பர்பெரியோர்க்கபேதமே.

பொதுநூல், சிறப்புநூல்.

வேதம், ஆகமம், ஆகிய இரண்டு நூல்களில், வேதம் பொதுநூல், ஆகமம் சிறப்புநூலாம். அஃது என்போலவே யென்னில், வேதம்நெல்லுப்போலவும, ஆகமம் அரிசிபோலவும் எனப்படும்.

வீராகமம்.

ஆரன்ன நெல்லோடொக்குமாகமமரிசிபோலாம்
ஆரணமூலகற்காஞ்சத்தினிபாதற்காஞ்சைவம்
பாரஃறிணைகள்நெல்லேபருகிடுமரிசிதன்னைச்
சீருயர்திணைகள்கொள்ளுமாறுபோற்றேறிடீரோ.

## நூற்சிறப்பு.

வேதம் பசுவைப்போலும், ஆகமம் பசுவின் பாலைப்போலும், தேவாரந் திருவாசகம் பாலின்கண்ணுள்ள நெய்போலும், சிவஞானபோதம் நெய்யின்கண்ணுள்ள சுவைபோலுமாம்.

வெண்பா.

வேதம்பசுவதன்பால்மெய்யாகமநால்வ
ரோதுந்தமிழதனினுள்ளூறுநெய்—போதமிகு
நெய்யினுறுசுவையாநீள்வெண்ணெய்மெய்கண்டான்
செய்ததமிழ்நூலின்றிறம்.

## வேதத்தினுக்குச்சமானமான நூல்கள்.

தேவர்குறளும், உபநிடதங்களும், தேவாரங்களும், வியாச சூத்திரமும், திருக்கோவையாரும், திருவாசகமும், திருமந்திரமும், ஆகிய இவைகள், வேதத்தினுக்குச் சமானமான நூல்ளாம்.

ஔவையார் வெண்பா.

தேவர்குறளுந்திருநான்மறைமுடிவு
மூவர்தமிழுமுனிமொழியுங்—கோவை

திருவாசகமுந்திருமூலர்சொல்லு
மொருவாசகமென்றுணர்.

**ஆகமத்துக்குச்சமானமான நூல்கள்.**

திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், சிவஞானபோதம், சிவஞானசித்தியார், இருபாவிருபது, உண்மை விளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப்பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மைநெறி, சங்கற்ப நிராகரணம், எனவரும் பதினான்கும் ஆகமத்துக்குச் சமானமான நூல்களாம்.

வெண்பா.

உந்திகளிறுவுயர்போதஞ்சித்தியார்
பிந்திருபாவுண்மைப்பிரகாசம்—வந்தவருட்
பண்புவினாபோற்றிகொடிபாசமிலாநெஞ்சுவிடு
வுண்மைநெறிசங்கற்பமுற்று.

**சித்தாந்த நூல்கள் வழிமுறை.**

சிவஞானபோதத்தை மெய்கண்ட சிவாசாரியர் திருவாய்மலர்ந்தருளினர். இச் சிவஞானபோதத்தைக் கற்றுணர்ந்த அருணந்திதேவர் சிவஞானசித்தியைச் செய்தார். இவ்விரண்டையுங் கற்றுணர்ந்த உமாபதி சிவாசாரியர் சிவப்பிரகாசத்தைச் செய்தார். இம் மூன்றுநூல்களுஞ் சீவன்களை முத்திக்குச் சேர்க்கும் நூல்களே ஆம்.

வள்ளலார் சிவப்பிரகாசவெண்பா.

சிவஞானபோதத்தாற்சென்மவிடாய்தீர்ந்து
சிவஞானசித்தியாற்றேறிச்—சிவஞான
போதத்தைமெய்கண்டான்போதித்தான்சித்தியினைச்
சாதித்தான் ருனருணந்தி.

மற்றிரண்டுமோராய்ந்துமறுவிலுமாபதியாா
சொற்றசிவப்பிரகாசத்தொன்னூ—லறறகில்லை
யாங்கதுவேசீவன்முத்தனுக்குவிக்குமந்நூலே
யோங்குகதீயேழியும்பின்னும்.

**பதினெண்புராணமும் வேதத்துக்குச்சமானம்.**

நான்கு வேதங்களை ஓதியுணர்ந்து அவைக ளில் ஐயமுற்ற அந்தணர், அரசர், வணிகர், ஆகிய இவர்கள் ஐயந்தீரவும், வேதம் ஓதுதற் கதிகாரிகளல்லாத சற்சூத்திரரும், நான்கு வரு ணத்துப் பெண்களும், ஓதி உணர்ந்து உள்ளந் தேறவும், சிவபெருமானுடைய திருவருளினு லே உண்டாக்கப்பட்டன பதினெண் புராண மாகிய வேதங்களாம்.

கந்தபுராணம் பாயிரப்படலம்.

அன்னதோாமறையினையுறிந்துமையமா
மன்னவரல்லவர்மரபிற்றேரவு
மின்னுமோர்மறையுளததுவுங்கேண்மதி.

ஏற்றமதாகியமன்றக்கும்யாமுனஞ்
சாற்றியவாகமந்தனக்குமாங்கது
வீற்றுறவருவதுமன்றுமேன்மையா
லாற்றவுநமதியலறையுகீரதே.

என்பெயரதற்கெனிலினிதுதோந்துளோா
துன்பமதகற்றிடுந்தொல்புராணமா
மொன்பதிற்றிருவகையுண்டவற்றினை
யன்புடைநந்திமுன்னறியக்கூறினேம்.

**பதினெண்புராணமும் அவைக்கதிகாரிகளும்.**

சைவம், பவுடிகம், மார்க்கண்டேயம், இலிங்கம், காந்தம், வராகம், வாமனம், மச்சம், பிரமாண்டம், கூர்மம் ஆகிய இப்பத்துஞ் சிவபுராணமே ஆம். பிரமம், பதுமம், ஆகிய இவ்விரண்டும் பிரமன புராணமேஆம். காருடம், நாரதம், விண்டு, பாகவதம், ஆகிய இந்நான்கும் விட்டுணுவின் புராணமே ஆம். ஆக்கினேயம் அக்கினியின் புராணமே ஆம். பிரமகைவர்த்தம், சூரியனின் புராணமே ஆம்.

கந்தபுராணம் பாயிரப்படலம்.

எதிரில்சைவமேபவுடியமார்க்கண்டமிலிங்க
மதிகொள்காந்தநல்வராகமேவாமனம்மச்சம்
புதியகூாமமேபிரமாண்டமிவைசிவபுராணம்
பதுமமேலவன்புராணமாம்பிரமமேபதுமம்.

கருதுகாருடநாரதம்விண்டுபாகவத
மரிகடதப்பெயராக்கினேயம்மழற்கதையா
மிரவிதன்கதைபிரமகைவர்த்தமாமிவைதாந்
தெரியுமொன்பதிற்றிருவகைப்புராணமாந்திறனே.

## வேதம் அட்டமூர்த்தியையும் பரமெனக் கூறுகின்றது.

வேதம், பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாய மாகிய இவைகளையும்; சந்திர சூரியனையும், ஆன்மாவையும், பிரமனையும், விட்டுணுவையும, சிவனையும், பரமென்று கூறுதலால், பரநிச்சயந்தெரியாதவர்களாய், அர்த்தராத்திரி அந்தகாரம் நிறைந்தபோது, சமுத்திரத்தின்கண் வீழ்ந்திருந்த காற்றினால் அலையுண்டு, அக்காற்றின் வேகத்தினால் தான் சேரவேண்டிய கரை யின்னதென்றறியாமல், பலபல துறைகளினும் காற்றினால் அலைக்கப்பட்டு வருந்துகின்ற ஒருவனைப்போலவே, சனகர்முதல் நான்கு முனிவரும் வேதங்களை ஓதி ஓதி மதிமயங்கிச் சிவபெருமானைநோக்கி அரியதவத்தைச் செய்கின்றார்கள்.

கந்தபுராணம்.

இருட்பெருங் கடலுள்யாமத் தெறிமருத் திடைப்பட்டார்குப், பொருட்பெருங் கடலாம்வேதம் புடைதொறுமலைப்பவிந்நாள், அருட்பெருங் கடலேயெய்த்தே யமைந்

தில துணாவுயாங்கண், மருட்பெருங் கடலினீங்கும் வன்னமொன நருடியென்றார்.

## வேதத்தின்பொருளை யுணராமல் அயன்சிறையிருத்தல்.

வேதத்தின் அருததம முழுதுந் தெரிந்திலனாகிய பிரமன், சிவபெருமானை அன்றி ஏனைய சிவமூர்த்தங்களை வணங்காதவனாய்ச் செருக்குற்று, ஓருநாள் சிவபெருமானை வணங்கி யேகும்போது, முருகக் கடவுளால் அழைக்கப்பட்டு அம்முருகக்கடவுள் முன்னிலையிற்சென்று கைகுவித்து வணங்கினதே அன்றி, வீழ்ந்து அடிவணங்கிலன்; ஆதலால் முருகக்கடவுள் அப்பிரமனை இருக்கச்செய்து "உனக்கியாது தொழில்" என்று வினவியபோது, "சிவபெருமானுடைய திருவருளினாலே உலகங்களைச் சிருட்டிக்கின்றேன்" என்று பிரமன் கூறினன். அப்போது குமரக்கடவுள் பிரமனைநோக்கி "உலகங்களெல்லாவற்றையும் நீ சிருட்டிக்கில் வேதம் முழுதும் உனக்குப் போமோ" என்று வினவினர் "சிவபெருமான் வேதங்களையும் ஆகமங்களையும் உண்டாக்கி, அதிற் சிலவற்றை யான் உய்யும்பொருட்டு அருள் புரிந்தார்" என்று பிரமன் கூறக், குமரக் கடவுள், "இருக்கு, ஒன்றைச் சொல்" என்ன. பிரமன், வேதங்களுக்கெல்லாம் ஆதி

யாகிய ஓம் என்னும் பதத்தை முதலி, லுச்ச, ரிக்க, அதனைக்கேட்ட குமரக்கடவுள் "நீ கூறிய ஓம் என்னும் பதத்தின் அர்த்தம் யாது" என்றுவினவ, அதன் பொருள் இன்னதென் றறியாதவனாய், பிரமன் திகைத்தனன், கண்களை விழித்தனன், வெட்கமடைந்தனன், விக்கினன், வெயர்த்தனன், ஓம் என்னும் பதமானது, சிவபெருமானுக்குப் பீடமாகவும், சிவபெருமானை யொழிந்ததேவர்கள் தோன்றும் எழுத்தினுக்கும் நான்கு வேதத்தினுக்கும் முதலா யுள்ளதும், காசியிலே இறக்கின்ற சீவர்களுடைய தலையைத் தனது வலத்துடையிலேவைத்து உமாதேவியாரைத் தனது ஆடையால் காற்று வீசும்படி செய்து அவர்களுடைய வலச் செவியிலே சிவபெருமான் ஓதுகின்ற அரியதாரகப் பிரமம், பிரமன் ஓம் என்று ஓதுவதன்றி, அதன் பொருளை அறிந்திலன், ஓம் என்னும் பதப் பொருளை அறியாத பிரமனை முருகக்கடவுள் குட்டிச் சிறையிலேவைத்தார்.

கந்தபுராணம் அயனைச் சிறைபுரி படலம்.

முகத்திலொன்றதாவவ்வெழுத்துடையதோர்முருக
னகைத்துமுன்னெழுத்தினுக்குறாபொருளென்னநவில
மிகைத்தகஞ்கண்களைவிழித்தனன்வெள்கினன்விக்கித்
திகைத்திருந்தனன்கண்டிலனப்பொருட்டிறனே.

## வியாச சூத்திரம்.

வேதப்பொருள் அளத்தற் கரிதாயிருத்தலால், பயிலர் வைசம்பாயனர், சயிமினி, சுமந்து, ஆகிய நால்வரும் உணரும்படி வேதவியாசர் வேதசூத்திரஞ் செய்தனர். அது வியாச சூத்திரமே ஆம். அது வேதாந்த சூத்திரமெனவும், பிரம மீமாஞ்சையெனவும், உத்தர மீமாஞ்சையெனவும் பெயர்பெறும்.

### கந்தபுராணம் பாயிரப்படலம்.

ஏதறுசுருதிகளிசைக்குமாண்பொருண்
மாத்திரைப்படாவெனுமாசில்காட்சியா
பாத்துணாபான்மையாற்பலவகைப்படச்
சூத்திரமானவுஞ்சொற்றுவைகினார்.

மயலறுபயிலரோவைசம்பாயனர
சயிமினிசுமந்துவாந்தவத்தர்நால்வர்க்கும்
வியலிருக்காதியாம்வேதநான்கையு
முயர்வுறுதவத்தினான்முறையினோதினான்.

தோல்வருமறைகளின்சூத்திரத்தையு
மேல்வருசயிமினிமுதலமேதையா
நால்வருமுணரியவின்றுநல்கினா
னால்வருங்கடவுளையனையதன்மையான்

## வியாசசூத்திர பாஷியம்.

வியாசசூத்திரத்திற்கு நீலகண்ட சிவாசாரியர், சங்கராசாரியர், இராமாநுஜாசாரியர், மத்துவாசாரியர் என்னும் நால்வர் பாஷ்யங்கள் செய்தனர். சைவர்களாலே கொள்ளப்பட்டது நீலகண்டபாஷ்யம். மாயாவாதிகளாலே கொள்ளப்பட்டது சங்கரபாஷ்யம். வைஷ்ணவர்களாலே கொள்ளப்பட்டது இராமாநுஜ பாஷ்யம். மாத்துவர்களாலே கொள்ளப்பட்டது மாத்துவ பாஷ்யம். வியாசசூத்திரத்தின் உண்மைப்பொருள் சைவசித்தாந்தப் பொருளே ஆம்.

## வியாசசூத்திரத்தின் உண்மைப்பொருள் சைவசித்தாந்த மென்பதற்குப் பிரமாணம்.

## ஒளவையார் திருவாக்கு.

தேவர்குறளுந்திருநான்மறைமுடிவு
மூவாதமிழுமுனிமொழியும் - கோவை
திருவாசகமுந்திருமூலர்சொல்லு
மொருவாசகமென்றுணர்.

முனிமொழியென்பது வியாசசூத்திரம்.

## பாஷ்யங்களின் உண்மை.

நீலகண்ட சிவாசாரியர், சங்கராசாரியர், இராமாநுஜாசாரியர், மாத்துவாசாரியர் ஆகிய நால்வர் செய்த பாஷ்யங்களிற் சிறப்பினையுடையது

நீலகண்ட சிவாசாரியர் செய்த பாஷ்ய மொன்றே. இதனுண்மையைப் பதினெண் புராணங்களால் அறிந்துகொள்ளலாம்.

### வேதம் போது.

நாலுவேதமும் பதினெட்டு ஸ்மிருதியுஞ் சமயவாதிகள் பலருந் தங்கள் தங்கள் இஷ்டப்படி கருதிய பொருள் கொள்வதற்கு இடங்கொடுத்து நிற்றலால் பொதுநூலென்று கூறப்பட்டது.

### பிரமகீதை சதரோய வுபநிடதார்த்தம்.

தத்தமாலான பெத்தவா தியாதாங் தங்களிற் றுங்கடர்க்கங்கள், கத்திடா நிறகும் பரிசெலாஞ்சுருதி மிருதிகள் கருதிய தளிக்குஞ், சுத்தமாவிருத்த மாகுமென்றேயென் றுணிவுதோல் பிறவியிற சுழல்வார, சித்தமா னதுபோயிவுறறிலே காதல் செய்யுமுன் செய்ததீ வினையே.

### திருவிளையாடற்புராணம் வேதத்துக்குப் பொருளருளிச்செய்த படலம்.

மறைவழி மதங்கட் கெல்லா மறைபிர மாணம் பின்செனு, றுறைதரு மிருதியெல்லா மீனைக்கனு குணமாமின்ன, முறையினுன் மாரத்தமென்று மொழிவதம் மார்த்தஞ்சோந்த, துறைகளவை திகமாமேலாச் சொல்வதிச் சுத்தமாக்கம்.

### கந்தபுராணம் சூரன் அமைச்சியற்படலம்

தத்தமாற்றங்கணிறுவியசமயிகள்பலருங்
கத்துபன்சொலேவினவினரவன்செயல்காணர்

சுத்தவாதுளமுதலியதந்திரத்தொகுதி
யுய்த்துணராந்திடீரரோயொருசிறிதுணராவாரா.

## வேதத்தின் உண்மைப்பொருள் மறைவு.

வேதப்பொருள் மறைந்திருத்தலால் அவ் வேதத்தினுக்கு மறையென்று பெயரெய்தியது. அதன் உண்மைப் பொருளைப் பிரமனும் அறியாமல் மயங்கினனாதலால், மற்றைய தேவர் முனிவர் மனுடர் அறிவோமென்று சொல்வது மிகுதியும் நகைக்கிடமாகுமே.

கந்தபுராணம் அயனைச் சிறைபுரிபடலம்.

தாமறைக்கெலாமாதியுமந்தமுஞ்சொல்லு
மோமெனப்படுமேரெழுத்துண்மையையுணரான்
மாமலரப்பெருங்கடவுளுமயங்கினனென்று
ஞமினிச்சிலவறிந்தனமென்பதுநகையே.

## வேதப்பொருள் செவிப்புலத் தமைப்பது.

வேதப்பொருளை ஓதும்போது வலச்செவிக் கோதுவதை யிடச்செவிக் கேளாது ஓதுவதே விதியென விருத்தலால், சிவபெருமான் தனது திருக்குமாரராகிய முருகக்கடவுளை நோக்கி "வேதத்தின் உண்மைப்பொருள் உனக்குப் போமே எனில், அதனை எனக் கோதுவாய்" என்று வினவ, அதனைக்கேட்ட முருகக்கடவுள் சிவபெருமானை நோக்கி "தேவரீர் உமாதேவிக்கு முன்னர் ஓதிய மறைப்பொருளைப் பலர்

முன்னிலையில் ஓதலாமோவென மறுக்கச், பெருமானை தமது குமாரராகிய குமரக்கடவுள் கூறியதைத் திருச்செவியிலேற்று வலச்செவியைக் கொடுத்தார். அப்போது சிவபெருமானுடைய திருச்செவியிலே முருகக்கடவுள் ஓமென்னும் பதப்பொருளை யுணர்த்தினர்.

கந்தபுராணம், அயனைச் சிறைநீக்குபடலம்.

கார்மரு குமரன்சென்னி கதுமென வுயிர்ததுச் செக்கர்த், தாமரு புரையுங்கையிற் றழுவியே யயனுந் தேற்ற, வோமென வுரைக்குஞ் சொல்லி னுறுபொரு ளுனக்குப் போமோ, போமெனி லதனையின்னே புகலென விறைவன் சொற்றான்.

முற்றொருங்குணருமாதிமுதல்வகேளுலகமெல்லாம்
பெற்றிடுமவட்குநீமுன்பிறருணரா தவாற்றாற்
சொற்றதோரிணையமூலதொல்பொருள்யாருங்கேட்ப
விற்றெனவியம்பலாமோமறையினுலிசைப்பதல்லால்.

என்றலு நகைத்துமைந்த வெமக்கருண் மறையினென்றதீ, தன்றிருச் செவியைநல்கச் சண்முகன் குடிலையென்னு, மொன்றொரு பதத்தினுண்மை யுரைத்தன னுரைத்தல் கேளா.

## வேதம் தமிழினும் மறைவு.

வேதத்தைத் தமிழில் ஓதிய திருவள்ளுவ நாயனரும் மறைவாகவே ஓதினர். அது சமய

வாதிகள் யாவருந் தத்தமக்குரிய பொருள் கொள்வதற்கு இடமாகவே யிருக்கின்றது.

சிவதருமோத்தரம் சிவஞானயோகவியல்.

செந்தமிழினின்பமிறுவாயலதுசெப்பார்
அந்தமிலியாதியுமிலானுணையையாய்ந்தார்
செந்தமிழினுங்கெவுடமாகவுனைசெய்தார்
இந்தயுககாலகலியீடறநல்வீடும்.

**திருவள்ளுவநாயனார் கூறியது.**

"திருவள்ளுவநாயனார் ஆதிபகவனென்றும், வாலறிவனென்றும், மலர்மிசை யேகினானென்றும், வேண்டுதல் வேண்டாமையிலா னென்றும், இறைவ னென்றும், பொறிவாயிலைந்தவித்தானென்றும், தனக்குவமை யில்லாதானென்றும், அறவாழி யந்தணனென்றும், எண்குணத்தான்" என்றும், பொதுப்படக் கூறினார். இவைகள் சமயவாதிகள் தத்தமக்குரிய பொருள் கொள்வதற் கிடமாகவே யிருக்கின்றது.

**சிவன்சொல் அக்கரத்தால் அற்பம்.**
**அர்த்தத்தால் அதிகம்.**

சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளிய வேதமானது அக்கரத்தால் அற்பமாகவும், அர்த்தத்தால் அதிகமாகவும் உள்ளது அன்றியும், ஒரு சொல்பலபொருளைக் கொடுக்கத்தக்கதுமாயுள்

ளது. ஆதலால், வேதம் பொதுநூலென்றார். அறிவிலே சிறந்தோர் பொதுவென்பது பலர்க்கும் பயனுகவேயுள்ளது.

ஶ்மாத்தரம் பரமதருமாதுயியல.

அமலவர னருளியசொல் வாக்கியமே யதுதா னருத்தத்தா லக்கரத்தா லதிகமற்பஞ், சமலருனை யதுபோல விபரீதஞ் சிறிதுஞ் சாற்றுதே யுள்ளபடி சாற்றுஞ் சாற்று, மமலனேயு மணுக்களேயு மண்டபேத மனைத்தினேயு மறிவிக்கு மாதலாலே, பவமொருவு நெறிதன்னைப் பயக்கும் போகம் பாலிக்கும் தானமுதற் பகரலாலே.

திருவிளையாடற்புராணம் திருநகரப்படலம்.

மறைகளாகமம்பொதுச்சிறப்பெனச்சிவன்வகுத்து
முறையிஞேதியவிதிவிலக்குனைகளுமுடிவில்
அறையுவீடுமொன்றிரண்டெனும்பிணக்கறவமைந்த
நுறைவிலாச்சிவயோகியர்குழாங்களும்பவால்.

வியாசசூத்திரத்துண்மை.

வேதத்தினுக்கு வேதவியாசர் செய்த சூத்திரமானது வேதாந்த சூத்திரமெனவும், பிரமமீமாஞ்சையெனவும், உத்தரமீமாஞ்சை யெனவும் பெயர் பெறும். இச்சூத்திரத்தினுக்குச் சங்கராசாரியர் இராமாநுஜாசாரியர், மாத்துவாசாரியர் ஆகிய மூவர்செய்த பாஷ்யமும், பஞ்சராத்திரமும், வைகானசமும், ஆகிய இவைகள் வேத

நூலைத் தழுவிச்செய்த நூல்களாம். ஆதலால், வியாசசூத்திரமும் வேதத்தைப்போலவே சமயவாதிகள் தத்தமக்குரிய பொருள் கூறுதற் கிடமுள்ளது. உலோகாயதம் நால்வகைப்பௌத்தம் ஆருகதம் ஆகிய புறப் புறச்சமயமும் தருக்கம், மீமாஞ்சை, ஏகான்மவாதம், சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரம், வைகானசம் ஆகிய அகப்புறச்சமயமும் பொய்நூலெனக் கொள்க. இவைகளால் ஆன்மசுத்தியுண்டாகாதென்றறிக.

திருவிளையாடற்புராணம்
வாதவூரடிகளுக் குபதேசித்தபடலம்.

புத்தராதியோாபுறவுளநெறிகளும்பொய்யா
நித்தவேதநூறழுவியவகவுளையுஞ்
சித்தமாசறுத்தரனருட்டெளிவியாவதனன்
மித்தையாணவத்தொடக்கறுவில்லையாம்வீடும்.

**வேதம் உபநிடதங்களால் பதியுண்மை தோன்றுது.**

நான்குவேதங்களாலும் முப்பத்திரண்டு உபநிடதங்களாலும் பதினெட்டு ஸ்மிருதிகளாலுஞ் சிவபெருமானுடைய உண்மையை அறிந்துகொள்ளத் தக்கதன்று.

கந்தப்புராணம் சூரனமைச்சியற் படலம்.

வேதீக்காம்சிக்குமுபநிடத்துச்சியில்விரிந்த
போதக்காட்சிக்குங்காணலன்புதியரிற்புதியன்

மூதக்காக்குமூதக்கவன்முடிவிற்குமுடிவா
யாதிக்காதியாயுயிர்க்குயிராய்நின்றவமலன்.

திருவாசகம்.

வானநாடரு மறியொணாதநீ மறையிலீறுமுன் றொடரொணாதநீ, யேனநாட்டருந் தெரியொணாதநீ யென்னையின்னிதா யாண்டுகொண்டவா, வூனைநாடக மாட்டுவித்தவா நையவையகத் துடையவிச்சையே.

**வேதம் கதிக்கேது விதுவெனக்கூறும்.**

வேதமானது சிவபெருமானிடத்துப் பத்தி வைத்துச் சிவபெருமானைத் துதித்த பத்தருக்கே அன்றி, மற்றவர்க்கு முத்தி அரிதென்று கூறும் ஆதலால் வேதம் பொதுவெனக் காணுக.

திருவிளையாடற்புராணம்
வாதவூரடிகளுக் குபதேசித்தபடலம்.

பத்திசெய்தரனருட்பெறுபத்தருக்கன்றி
முத்தியெய்துதற்கரிதெனமறைமொழிவதுப்பொதுநூல்
சத்தியப்பொருட்டெளிவெலாஞ்சத்தினிபாதர்க்
குய்த்துணாத்தியதாகமமென்பர்மெய்யுணர்ந்தோர்.

**ஆகமம் வேதத்துண்மையைப் போதித்தல்.**

வேதத்திலே கூறிய பிரமசரியம், கிரகத்தம், வானப்பிரத்தம், சந்நியாசம் ஆகிய நான்கும் வேதாசாரத்தினாலே அடைதற்கரிதாகிய சிவக

திக் கேதுவென்றும் வேதத்தினுடைய உண் மைப்பொருள் இதுவென்றும் ஆகமங்காட்டும்.

திருவிளையாடற்புராணம்

வாதவூரடிகளுக் குபதேசித்தபடலம்.

சுருதிகூறியவறமுதனான்குமத்தொன்னூற்
கரியதாகியகதிக்கேதுவென்றாகமங்காட்டுஞ்
சரியையாதிநாற்பாதமுந்தலைதெரிந்துணர்ந்து
பெரியமாணவாகமுகமும்வினாவிடைபேச.

**வேதவிதி.**

வேதமானது ஆன்மாக்களின் பக்குவத்துக் கிசையப் பிரமசரியம் முதலாகிய நான்கு தரு மங்களையும் யாகாதிகருமங்களையுஞ் சொல்லும். பதினெட்டுஸ்மிருதிகள் உலக நீதியையும் பிதிர் கருமாதிகளையுஞ் சொல்லும். வேதம் ஸ்மிருதி களினாலே சொன்ன அறங்களும், யாகங்களும், பிதிர் கருமங்களும், சுவர்க்கலோக பதவியைக் கொடுப்பதே அன்றிச் சிவபதவியைக் கொ ாது.

கைவல்லியம்.

தினமுமன்னுகா பிள்ளைநோய்க் கிரங்கியே தீம்பண்ட மெதிர காட்டிக், கனமருந்துக ளொளித்துவைத் தழைக்கின்ற கருணைநற்றாயபோலே, மனையறங்கள்செய் மகங்கள்செய் நன்றென்று மலர்ந்தவாசகஞ் சொல்லும், நினைவுவேறுகாண் சுவர்க்ககாமிக ளந்தநிண்ணயந் தெரியாரே.

**வேதம் ஸ்மிருதிகளில்விதித்த கதியிலக்ஷணம்.**

வேதம ஸ்மிருதிஆகிய யிவைகளிற் கூறிய பிரமசரியம் முதல் நான்கையும் அசுவமேதயாகம் முதல் யாகங்களையும் கோதானம் முதலாகிய தானங்களையும் கங்கை முதலாகிய தீர்த்தங்களில் நீராடலையும், சாந்திராயணம் முதலாகிய விரதங்களையும், அனுட்டித்தோர் சுவர்க்கலோகத்திலேசென்று அங்குள்ள போகங்களைப் புசித்து, கண்ணிமைக்குங்காலத்துள் அங்கு நின்று இங்குவருவர். ஆதலால், வேதம் ஸ்மிருதிகளில் கூறிய அறம் போகத்தைக் கொடுத்து நீக்குவதாம் இது சிவலோகபோகங்களுக் கேதுவேயன்றி அதனைக் கொடாதென்றிக.

சிவஞானசித்தியார்.

*தானமியாகந் தீர்த்தமாச்சிர மந்தவங்கள் சாந்திவிரதங் கன்மயோகங்கள் சரித்தோ, ரீனமிலாச் சுவர்க்கம்பெற் றிமைப் பின்மீள்வ ரீசனியோ கக்கிரியா சரியையினின் முயன்றோர், ஞானமிலா முத்திபதம் பெற்றுலகமெல்லா மொடுங்கும்போ தரன்முனிலா தொழியி லுற்பவித்து, ஞானநெறி யடைந்தடைவா சிவனையங்கு நாதனேமுன் னிற்கினனு ருவாநற்றுளே.*

**சிவாகமநூற் சிறப்பு.**

வேதநூலென்றும் ஆகமநூலெனறும இரண்டு நூல்கள் உலகத்திலே உண்மைநூலாகத்

தோன்றியது. சொல்லாநின்ற உபவேதங்களும் உபாகமங்களும், புராணங்களும், உபபுராணங்களும், மற்றும் நூல்களும் இவைகளின் நின்று விரிந்த நூல்களே ஆம். பொதுநூலாகிய வேதம் உலகர்க்குப் போகவிதத்தைக் கொடுக்கும் சிறப்புநூலாகிய ஆகமம் முத்தியை விரும்பினோர்க்குச் சத்திநிபாதத்தைக் காட்டி முத்தியைக் கொடுக்கும். வேதாந்தத்திலே நீதில்லாத பொருளையும் வேதத்திற் சொல்லாதபொருளையும் ஆகமஞ் சொல்லும்.

சிவஞானசித்தியார்.

வேதநூல் சைவநூ லென்றிரண் டேநூல்கள் வேறு ளைக்கு நூலிவற்றின் விரிந்தநூல்ய, னாதிநூ லநாதியம லனற்ருநூ லிரண்டு மாரணநூல் பொதுசைவ மருஞ்சிறப்பு நூலா, நீதியினு லுலகர்க்குஞ் சத்திநி பாதர்க்கு நிகழ்த்தியது நீண்மறையி னெழிபொருள்வே தாந்தத், நீதில்பொருள் கொண்டுனைக்கு நூல்சைவம் பிறநூல் பூர்வபக்ஷி வாகமங்கள் சித்தாந்த மாகும்.

## நூல்கள் பலவும் வேதாகமத்துள்ளது.

வேதம், சிவாகமம் ஆகிய இரண்டும் முதனூல்களே ஆம். பதினெட்டுஸ்மிருதிகளும், பதினெட்டுப் புராணங்களும், அறுபத்துநாலு கலைஞானங்களும், வேதாகமத்தின் வழிநூல் சார்புநூல்களே ஆம். புராணம், ஸ்மிருதி, கலைஞானம்.

ஆகிய இவைகளின் பொருள்களை வேதாகமங்கள் ஒவ்வொரு இடங்களிலே எடுத்துக் காட்டுத லால் இவைகள் வேதாகமத்துட் டுணிபொருள் களே ஆம். புராணங்களும், ஸ்மிருதிகளும், கலை ஞானங்களும் வேதாகமத்துட் டுணிபொருள்க ளாதலால் அவைகளும் வேதாகமத்தைப்போல மெய்நூல்களே ஆம்.

சிவஞானசித்தியார்.

அருமறையாகமமுதனூலனைத்துமுரைக்கையினலளப்
பரிதாமப்பொருளைப் பரனருளாலணுக்க
ளுருவாகன்பின்றனிந் தனியேதாமறிந்
தவனயிற்றாகவொடுக்கரங்களினுறசமயஞ்சாதித்து
மிருதிபுராணங்கலைகள்மற்றுமெல்லா
மெய்நூலின்வழிபுடையாமங்கம்வேதாங்கஞ்
சுருதிசிவாகமமொழியச்சொல்லுவதொன்றில்லைச்
சொல்லுவாரதமக்கறையோசொல்லொண்ணாதே.

## ஆகமவிதி.

சிவாகமநூலிற் சொல்லிய சரியை, கிரியை, யோகம், ஞானம், ஆகிய இவைகளைச் செய்தால் சிவபெருமான் குருவடிவாகவே வந்து எடுத் திருந்த அந்தச் சென்னத்திலே தனது நயன தீக்ஷைசெய்து, ஆணவாதிமலங்களைப் போக்கி, அறிவாகிய ஞானசமுத்திரத்திலே அமிழ்த்தச்

செய்து ஆனந்தமாகிய மழையைச் சொரிவித்து, உற்பத்திநாசத்தை நீக்கி, முத்தியாகிய தனது திருவடியில் அணையச் செய்வாரென்று ஆகமங்கள் கூறுமே ஆம்.

சிவஞானசித்தியார்.

சித்தாந்தத்தேசிவன்றன்றிருக்கடைக்கண்
சேர்த்திச்செனனமொன்றிலேசீவன்முத்தராக
வைத்தாண்டுமலங்கழுவிஞானவாரி
மடுத்தானந்தம்பொழிந்துவரும்பிறப்பையறுத்து
முத்தாந்தப்பாதமலர்க்கீழ்வைப்பனென்று
மொழிந்திடவுமுலகரெல்லாமூர்க்கராகிப்
பித்தாந்தப்பெரும்பிதற்றிட் பாவப்
பெருங்குழியில்வீழ்ந்திடுவரிதுவென்னபிராந்தே

**ஆகமத்தால் சிவனை அறிவது.**

ஆகமத்திலே சொல்லப்பட்ட சரியை, கிரியை, யோகம், ஞானம், ஆகிய இவைகளைச் செய்து, சமயம், விசேடம், நிருவாணம், அபிடேகம், ஆகிய உபதேசத்தைப்பெற்று சமயிபுத்திரன், சாதகன், போதகனாகிய பக்குவத்தை அடைந்து இவைகளினாலே ஞானம், பயம், பத்தி, வைராக்கியம், பிறக்குமே ஆயின் சிவபெருமானுடைய திருவருளுண்டாகும். சிவபெருமானுடைய திருவருளுண்டாகவே சத்தினிபாத முதிக்கும் அப்போது சிவபெருமான் குருவடிவாகி

வந்து பாததீக்ஷை செய்து தனது உண்மை வடி
வைக்காட்டித் தனது திருவடியிலே அணையச்
செய்வாரோ ஆம்.

சிவஞானசித்தியார்.

அருளினாலாகமத்தேயறியலாமளவினாலுந்
தெருளலாஞ்சிவனைஞானச்செய்தியாற்சிந்தையுள்ளே
மருளெலாநீங்கக்கண்டுவாழலாம்பிறவிமாயா
விருளெலாமிரிக்கலாகுமடியரோடிருக்கலாமே.

கந்தபுராணம் சூரனமைச்சியற்படலம்.

தத்தமாறறங்கணிறுவியசமயிகள்பலரும்
கத்துபுன்சொலைவினவினரவன்செயல்காணா
சுத்தவாதுளமுதலியதந்திரத்தொகுதி
உய்த்துணர்ந்திடீரோவொருசிறிதுணர்வார்.

பிரமகீதை ஸாங்கோக்கிய உபநிடதம்.

ஆகமங்கள்பலவுமுணர்ந்தாடுகின்றதிவனையனு
போகமொன்றிலறியுமறிவாகிநின்றபுனிதனிவ
னேகனநதவனுபவமதேயிவன்றன்வடிவுதனை
யோகமொன்றவருள்பவனுமோதுகின்றபரசிவன்

கைவல்லியம்.

ஆகமப்பிரமாணத்தாலறியென்றுமவாக்குக்கெட்டா
தேகமாம்பிரமமென்றுமிதயத்தாலுணர்வாயென்றும்
சோகமாமனததிற்கெட்டாச்சுயஞ்சோதியெனுறுஞ்சொ
மோகமாமிரண்டுசெங்கைமுளைத்தனடறித்திடவே. [ன்னீ,

## நாலுவேதமுஞ் சிவனைக் கண்டிலதென்பது.

நான்கு வேதமுஞ் சிவபெருமானைத் தேடிக் காணுமல் இளைத்ததே அன்றிச் சிவபெருமானைக்கண்டு இளைப்பு நீங்கி இன்பத்தைப் பெற வில்லையே ஆம்.

### திருவிளையாடற்புராணம் பாயிரம்.

எழுதருமறைகடேறவிறைவனைப்பல்பிறைகங்குற
பொழுதறுகாலநதென்றும்பூசனைவிடாதுசெய்து
தொழுதகைதலைமேலேறத்துருட்புகண்ணீருள்மூழ்கி
பழுதடியடைந்தவன்பரடியவர்க்கடிமைசெய்வாம்.

அல்லையீதல்லையீதெனாமறைகளுமன்மைச்
சொல்லினாற்றுதித்திளைக்குமிச்சுந்தரனுடம்
கெல்லையாகுமோவென்னுமாபெம்மெய்க்கோவிதனைச்
சொல்லுவேனெனுமாசையெம்மொல்வழிகேளா.

### திருவிளையாடற்புராணம்
### வேதத்துக்குப் பொருளருளியபடலம்.

மறைபல முகங்கொண்ட டறிவரியினைத்து மயங்கவேறகண்டபரி பூரணமாய், நிறை பரப் பிரமமாகுமிக்குறியைக் கருமநன்னெறி வழாப்பூசை, முறையினுஞான நெறியினிப்பொருளை யருளினுன் முயக்கற முயங்கு, மறிவினுந் தெளிவ துமக்குநாமுணர்த்த வருமறைப் பொருள் பிறாக் கூறிதால்.

## சனகராதியர்க்கு ஆகமஉபதேசம்.

சிவபெருமான் சனகர் முதலாகிய நான்கு முனிவர்க்கு வேதப்பொருளைப் போதித்துப் பக்குவராக்கியபின்பு அம்முனிவர்கள் சிவஞான போதத்தை அறிந்தாயும் பொருட்டுச் சிவாகமத்தையே போதித்தார். ஆதலால், வேதாந்த நூலின் தெளிவு சித்தாந்தநூலென்பதே சத்தியம். வேதாந்தமென்பது வேதத்தின் ஞானகாண்டமாம். சித்தாந்தமென்பது ஆகமத்தின் ஞானகாண்டமாம். இவ்விரண்டும் ஒன்றுக்கொன்று பேதமன்றென்க.

### கந்தபுராணம் மேருப்படலம்.

நந்திமுற்கடையைப்போற்றுஞானநாயகனுமன்னணன்
முந்துறுசனகனாதிமுனிவராதொழுதுகேட்ட
வந்தமிலாகமத்தினரும்பதமூன்றுங்கூறட்
புந்தியதொடங்குஞானபோதகம்போதியென்றா.

என்னெனுங்கைத்தியாதுமெதிமொழிபுரிந்தானல்லன்
பன்னுவதன்றான்மற்றிப்பரிசினுலிருந்தல்கண்டு
ரந்நெறியாகுமென்றேயவாக்குணாத்துமாற்று
ஹுன்னரும்பரத்தின்மேலோனுருசெயல்புரிதலுறறான்.

இருவருமுணராவள்ளலேனவெள்ளெயிறியானும
சிரநிலையநந்தகோடிதினைத்திடுமுரத்திற்சீரகொள்

கரதலமொன்றுசோத்திமோனமுத்திரையைக்காட்டி
யொருகணஞ்செயலொன்றின்றியோகுசெய்வாரலுற்றான்

முந்தைவேதமுழுதுமுணர்த்திய
யெந்தையோகவிருசிலம்போந்துதஞ்
சிந்தையொன்றுநிறனரிதாதலி
னொந்துபின்னருநோற்றலைமேயினா.

பின்னுமைந்தாபெருந்தவமாற்றியே
தொன்னலம்பெறுதூயவுளத்தரா
யென்னையாளுடையீசனருளினான்
மன்னுவெள்ளிவரையிடையேகினா.

ஏகல்பெற்றிடுமெக்கட்கினிதுளம்
டாகமுற்றபரிசுணர்ந்தெம்பிரா
னாகமத்திலரும்பதமூன்றையு
மோகைபற்றியுணர்வகைகூறியே.

கூனமாமதிக்கோடுமிலைச்சிய
வானநாயகன்மற்றவர்காண்டக
ஞானபோதநவிலருந்தன்மையான்
மோனமேயமுதற்குறிகாட்டினான்.

**வயிணவநெறி.**

வயிணவர் நான்குவேதங்களையும் பதினெண் புராணங்களையும் எம்பெருமானாகிய நாராயணனே செய்தானென்று தாபித்து, அவைகளில்

விதித்தபடி நடவாமல் பஞ்சராத்திரம். வைகானசம், ஆகிய இரண்டு நூல்களை மெய்நூலெனக்கொண்டு அவைகளில் விதித்தபடியே நடக்கின்றன. அவ் வயிணவருக்குள்ளும் மகா வயிணவரொன்றும் வயிணவரொன்றும் இருவகைப் பட்டுள்ளார். பஞ்சராத்திரநூலின்படி நடப்பவர் மகா வயிணவர். வைகானசநூலின்படி நடப்பவர் வயிணவர். இவர்களிருதிறத்தாரும் ஒருவரோடொருவர் தர்க்கம்பண்ணிப் பிணக்கடைவதே அவர்களுக்குப் போதுமான புண்ணியம். அது போதாததுபற்றிச் சிவபெருமானையுஞ் சிவபுராணஞ் சிவாகமங்களையும் சிவசின்னங்களையும் சிவனடியார்களையும் தூஷிப்பதே அவர்செய்யுந் தருமம்.

ஏகாதசிப்புராணம்.

*மாசில்பஞ்சராததிரத்தின் வளிநடப்போர மகாவயிட்டிணவரொன்று, மாசில்வைகானச மதத்தின்வளி நடப்போரவரைவயிட்டிணவரொன்றுங், கூசின்மறைமிருதிவளிநடப்பவரைச் சமார்த்தரொன்றுங் கரைந்தாகாந்தத், தேசிலவைகானச பஞ்சராத்திரிகளிருவிதமென் றிசைத்ததன்றே.*

**வைதிகநெறி.**

வைதிகர் நான்கு வேதங்களையும் பதினெட்டு ஸ்மிருதிகளையும்மெய்நூலெனக்கொண்டு அவை

களில் விதித்தபடியே நடக்கின்றனர். அன்றியும் சைவாகம விதிப்படி பூசிக்குஞ் சிவாலய தரிசனமுஞ் செய்வார். ஆதிசைவர்களாகிய சிவாசாரியரிடத்திலே சிவதீக்ஷைபெற்றுச் சிவபூசையுஞ் செய்வார்கள். சிவதீக்ஷைபெற்ற மகா சைவர்களாகிய வைதிகர் ஆன்மார்த்தமாக இட்டலிங்கபூசை செய்தற் குரியரோ அன்றிச் சிவன் கோயிலுக்குள் ளிருக்கும் பரார்த்தலிங்கபூசை செய்தற் கதிகாரியராகார்.

அருணகிரிப்புராணம்

வைதிகர்பெறினுஞ்சைவதீக்கையைவாய்க்கவேதங்
கையினும்பரார்த்தலிங்கந்தீண்டுதல்கடனேவன்று
வையகந்தனக்குநாசம்வருமிவர்தீண்டிற்சுத்த
சைவராற்பரிகாரத்தைப்புரிகநூல்சாற்றுமாற்றால்.

சைவசமயநெறி.

அபன்முகத்திற்றோன்றியவந்தணராசசித்துப்
பயனடைதற்கிட்டலிங்கம்பாங்கு
பாங்கில்லைத்தீண்டப்பரார்த்தமவர்தீண்டிற்
றீங்குலகுக்காமென்றுதேறு.

**சைவசமயம்.**

சிவனை வணங்குவோர் சைவர். சைவமாவது சிவசம்பந்தம்.

## திருமந்திரம்.

சைவஞ்சிவனுடன்சம்பந்தமாவது
சைவந்தனையறிந்தேசிவஞ்சாருதல்
சைவஞ்சிவந்தன்னைச்சாராமனீவுதல்
சைவஞ்சிவானந்தஞ்சாயுச்சியமே.

சைவசமயத்தனிநாயகனந்தி
யுய்யவகுத்தகுருநெறியொன்றுண்டு
தெய்வச்சிவநெறிசன்மார்க்கஞ்சேர்ந்துய்ய
வையத்துள்ளார்க்குவகுத்துவைத்தானே.

## சைவபேதம்.

அநாதிசைவர், ஆதிசைவர், மகாசைவர், அநுசைவர், அவாந்தரசைவர், பிரவரசைவர், அந்தியசைவர் எனவே சைவம் ஏழுபேதமாம்.

## இவற்றுள்.

அநாதிசைவனாவான் சதாசிவலிங்கப்பெருமான். ஆதிசைவ ராவார் அநாதிசைவனாகிய சதாசிவலிங்கப் பெருமானைப் பூசிக்குஞ் சிவபிராமணர். மகாசைவ ராவார் சிவதீக்ஷைபெற்ற வைதிகப்பிராமணர். அநுசைவராவார் சிவதீக்ஷைபெற்ற அரசரும், வணிகரும், அவாந்தரசைவ ராவார் சிவதீக்ஷைபெற்ற சூத்திரர்.

பிரவரசைவராவார் சிவதீக்ஷைபெற்ற அநுலோமர். அந்தியசைவராவார் பிரதிலோமர்; அந்தராளர், விராத்தியர்.

ஆகமம் ஆசௌசதீபிகை:

அரியசதா சிவனென்போ னநாதிசைவ னவன்பா லவ
தரித்த சிவமறையோ ராதிசைவ ரிவரபர, லரியசிவ தீக்
கைபெறற பூசுரர மகாசைவ ருபாந்தவரசன் வணிகன
னுசைவ ராவார, பெரியகுலனைப் புயத்தோ னவாந்தர
சை வன்சீர் பெறுசவன்ன னுதியநு லோமாபிர வரராம்,
விரியவனி மிசை யொழிந்தோ ரந்தியசை வத்தோர விரிந்
திடுமேழ் சைவவித மிவையெனு நூல்விளம்பும்.

## ஆதிசைவரின் கோத்திரம்.

அநாதிசைவனாகிய சதாசிவமூர்த்தியின் ஐந்து திருமுகத்திலேநின்று தோன்றிய கௌசிகர், காசிபர், பாரத்துவாசர், கௌதமர், அகத்தியர ஆகிய ஐந்து ருஷிகோத்திரத்திலே சனித்த சிவப்பிராமணர்களே ஆதிசைவராம். கௌசிக விருடிகோத்திரம் சிவகோசரம். காசிபவிருடி கோத்திரம் சிகாகோசரம். பாரத்துவாச விருடிகோத்திரம் சோதிகோசரம். கௌதமவிருடி கோத்திரம் சாவித்திரிகோசரம். அகத்திய விருடிகோத்திரம் வியோமகோசரம்.

## வைதிககோத்திரம்.

பிரமனமுகத்திலே நின்று தோன்றிய கவுணியர், கோதமர், முற்கலர், பாரத்துவசர், ஆரீதர் ஆகிய ஐந்து திருடிகோத்திரத்தார் வைதிகராவார். ஆதிசைவராகிய சிவப்பிராமணரிடத்திலே சிவதீக்ஷைபெறில் மகாசைவராவார்.

சீகாழிப்புராணம் பிரமபுரமான
வத்தியாயம்.

முனரியாலைக் கவுணியா கோதமா முறகலா பா ரத்துவ சா, வளரா ரீதரொனட் கிளாந்த மறைக் கோத் திரத்து மு னிவரனைப், புளகமறையா கமமலாந்த புணாிமடுத்த மு துகேள்வித், தளராவாதி சைவகுலத் தகுமைம் டான்மை க் கடவுளனை.

## சைவசமயத்திலே பிறத்தலரிதென்பது.

—ருமபூமியாகிய இப்பரதகண்டத்திலே மானுடதேகமெடுத்துப் பிறத்தலரிது. இப்பரதகண்டத்திலும் குமரித்தீவிலே பிறத்தலரிது. இக்குமரித்தீவிலும், காசி, காஞ்சி, சிதம்பரம், இராமேசுரம், முதலாகிய புண்ணிய ஸ்தலங்களிலே பிறத்தலரிது. இப்புண்ணிய தலங்களிலும் ஆந்திய சைவரிலே பிறத்தலரிது. ஆந்திய சைவரிலும் பிரவரசைவரிலே பிறத்தலரிது.

பிரவர சைவரிலும் அவாந்தர சைவரிலே பிறத்தலரிது, அவாந்தர சைவரிலும், அநுசைவரிலே பிறத்தலரிது. அநுசைவரிலும் மகாசைவரிலே பிறத்தலரிது. மகாசைவரிலும் ஆதிசைவரிலே பிறத்தலரிது. ஆதிசைவரிலும் நாலுவேதம், இருபத்தெட்டாகமம், பதினெண்புராணம், பதினெண் மிருதி முதலானவற்றையோதுத லரிது. ஒதுவதிலும் ஒதியநூற்பொருளை அறிதலரிது அறிதலிலும் அறிந்த அறிவின்படி நிற்றலரிது. அதிலும் மேலானசைவத்துறையில் நின்று சிவலோகத்தில் சேர்வதரிது அச்சிவலோகத்திலும் அச்சிவபெருமான் சந்நிதானத்தில் நிற்றலரிது. அச்சிவபெருமான் சந்நிதானத்தில் நிற்றலிலும் அச்சிவபெருமானுடைய ரூபத்தைப் பெற்றுக்கொள்ளுதலரிது. அச்சிவபெருமானுடைய ரூபத்தைப் பெற்றுக்கொள்ளுதலிலும் அச்சிவபெருமானுடைய பாதத்திலே சேருதலரிது.

## சிவதருமோத்தரம்.

இந்தப்பாரதமெய்தற்கெளியதே
வந்துபாரதந் தன்னினுமானிட
ரந்தவானமடையுங்கருமமுஞ்
சிந்தியார்சிவன்சேவடிசேரவும்.

வேண்டியபதில்லை. வேதத்திலே சொல்லிய வி-
திப்படி அவர்கள் நடக்கில் வேதத்திலே பரம்
என்று சொல்லிய சிவனையும், பிரமனையும், சூரி
யனையும், சந்திரனையும், அக்கினியையும், பூமி
யையும், தண்ணீரையும், காற்றையும், ஆகாயத்
தையும், விட்டுணுவை ஆலயத்திலே வைத்து
வணங்குவதுபோலவே வணங்கவேண்டும். வ
ணங்காததினால் சிவனையும், சிவாகமங்கள், சிவ
புராணங்கள் முதலான நூல்களையும், சிவசின்
னங்களையும், சிவனடியார்களையும், நிந்திக்கின்
றதுபோலவே வேதத்தையும் நிந்திக்கின்றார்
கள். அன்றியும், வேதம் போதுமான சத்திய
நூலாக அவர்கள் கொள்ளில், பஞ்சராத்திரம்,
வைகானசம் ஆகிய இரண்டு நூல்களும் வேண்
டியதில்லை. வைகானசம், பஞ்சராத்திரம், ஆ
கிய இருவகை நூல்களையும் மெய்நூலெனவே
அவர்கள் கொண்டதினால், வேதத்தைப் பொய்
நூலென்று அவர்கள் சொல்லவேண்டியதில்லை.
அவர்கள் செய்கைதானே சொல்லும்.

## சிவாகமச் சிறப்பு.

வேதம், சிவாகமம் ஆகிய இரண்டும் சிவ
பெருமானுடைய திருவருளினா லுண்டாக்கப்
பட்ட உண்மையான நூல்கள். சிவபெருமானு
டைய திருவருளினாலே வேதாகமம் உண்டாகா

விடில், ஒரு ஆன்மாக்களும் முத்தியை அடை வதில்லை. வேதம் போககாமிகளுக்கும் ஆகமம் முத்தி காமிகளுக்கும் உண்டாக்கிய நூல்கள். வேதத்தின் கருமகாண்டமும், ஆகமத்தின் கரு மகாண்டமும, ஒன்றுக்கொன்று பேதம். வேத த்தின் ஞானகாண்டமுஞ், சிவாகமத்தின் ஞான காண்டமும் ஒன்றுக்கொன்று பேதமில்லை. வே தமும், ஸ்மிருதியும், புராணங்களும் கூறிய புண்ணியங்கள் பசுபுண்ணியங்கள். ஆகமங்க ளிலே சொல்லப்பட்ட புண்ணியங்கள் சிவ புண்ணியங்கள். சிவாகமங்களிலே சொல்லப்ப ட்ட சிவபுண்ணியங்கள் சாலோக சாமீப சாரூப சாயுச்சிய பதவிகளைக் கொடுக்கும். வேதத்தி லே விதித்த அக்கினிகாரியம், ஓமாதிகளும், சாந்திராயண விரதாதிகளுஞ் செய்தோர்கள், பூமி, அந்தரஞ், சுவர்க்கம் ஆகிய இவ்வுலகங்க ளிலே விமானம் முதலானவற்றிலேறிச் சந்தோ ஷத்தோடு போகத்தைப் புசிப்பார்கள். நூறு அசுவமேதயாகஞ் செய்தோர்கள இந்திர போ கத்தைப் பொருந்துவர்கள். இப்படியே அனந் தகோடி அசுவமேதயாகஞ் செய்தோர்கள் சிவா கமத்திலேசொன்ன சிறிய சிவபுண்ணியம் பொ ருந்திய சிவனடியார்களுக் கொப்பாகமாட்டார் கள்

வேதத்திலே சொல்லப்பட்ட பசுபுண்ணியங்கள் மேன்மேலும் பிறப்பையும் இறப்பையும் கொடுத்திடும். சிவாகமத்திலே சொல்லப்பட்ட சிவபுண்ணியங்கள் ஆணவாதிமலத்தை நீக்கிச் சிவபெருமானுடைய திருவடியிலே அணையச் செய்யும்.

ஆதிகாலத்திலே ஆன்மாக்கள் வேதமோதி முத்தி அடையாதது பற்றிச் சிவபெருமான் சிவாகம மிருபத்தெட்டைச்செய்து அவைகளினால் முத்தி அடைவித்தாரென்று சிவபுராணங்கள் கூறுகின்றன. சிவாலயங்கள் சிவாகமத்திலே விதித்தவிதிப்படி பூசித்துத் தரிசித்துவருவதே இவைகட்குச் சான்றாம். சிவாலயங்கள் காசி, காஞ்சி, சிதம்பரம், இராமேசுரம் முதலாகிய இடங்களாம். எழுவகைச் சைவரில் பூசைசெய்பவன் ஆதிசைவன். பூசை யேற்பவன் அநாதிசைவன். மற்றைய ஐவகைச் சைவரும் காண்பவரோ ராம்.

## சிவபுண்ணியத்தெளிவு.

அழுக்கிலா வநாதிமுத்த னகண்டித துரியாதீத, னிழுக்கில்வே தாகமங்க ளியம்பினன் பொதுச் சிறப்பென், றொழுக்கமா ருலகத்தோர்க்கு மோங்குசத் தினிபாதத்தின், வழுக்கிலா தவாக்குமென்றே மதித்தனர்நூல் வல்லோரே.

சீவனைச் சிவத்தி னொன்றாச் சேர்க்குஞ் சித்தாந்தத் தோர்க்குஞ், சீவனைப் பரத்தினொன்றாச் சேர்க்கும்வேதாந்தத் தோர்க்கும், பாவினை யிரண்டுமொன்றே பரமஞானந் தோர்க்கெல்லா, மேவிய கருமகாண்டம் விளம்பிடிற் பேதமாமே.

சுருதியின்மிருதிமுற்றுஞ்சொற்றிடும்புராணமெல்லாங்
கருதுபுண்ணியங்கட்குத்தங்கதிபசுத்துவமேகாட்டும்
பொருதிமிரகற்றிச்சைவம்புகல்சிவபுண்ணியந்தான்
வருதியென்றருளாற்சாலோகாதியைவழங்குமன்றே.

ஆரணம்புகன்றவாற்றாலக்கினிட்டோமமாதி
சீரணிவிரதநற்சாந்திராயணஞ்செய்கின்றோர்கள்
பூரணவிமானத்தேறிப்பூமியந்தரசுவர்க்கத்
தேரணிபுனிதராகியின்பொடும்போகந்துய்ப்பார்.

பூசைகொளசுவமேதமொருநூறியாகஞ்செய்தோர்
வாசவன்பதத்தின்சேர்வாரமரர்திவரநந்தகோடி
[illegible]சோமயாகத்தினுநிறைசிவன்றொண்டதாமே
பேசசாட்டியத்தாற்சேரும்பெரும்பதமுடையாமன்றே.

களிற்றிடுமிவைசரீரகன்மமென்றறைந்தவாற்றால்
விளித்துயிரினைப்பிறப்பில்வீழ்த்திடுமதனுலாவி
குளித்திடுமலத்தைநீக்கிக்குணாகழல்காட்டுமீசன்
றெளித்திடுசிவாகமத்திற்செப்புபுண்ணியங்கடாமே.

ஆதியிலநாதிசச்சிதானந்தவமலன்றானே
[illegible]பாதியவிமலஞானமுணர்வுயிர்க்கருளைநோக்கிச்

சோதிசோமருணைமேனிதொடக்கிப்பின்னருளாற்கூறு
நீதிசோமாமிகாதிநிறைமொழியிருபத்தெட்டாம்.

சிவாகமவிதிப்படி சிவாலயம் பூசிப்ப
தென்பதற்குப் பிரமாணம்.

கந்தபுராணம் வள்ளியம்மை
திருமணப் படலம்.

இவ்வனையொருசாரதன்னிலிராறுதோளுடையவெந்தை
மைவிழியனைங்குந்தானுமாலயத்துணைராவள்ள
லவ்வகையுருவிற்றென்றையாகமவிதியாலுய்த்து
மெய்வழிபாடுசெய்துவேண்டியாங்கருளும்பெற்றான்.

கந்தபுராணம் தக்கன்சிவபூசை செய்படலம்.

நாயகன்மொழிதருநவையிலாகம
மேயினமுறைதெரிவிரதனுக்கே,
பாய்புனல்புனைசடைப்பரமன்றன்னமல
ராயிரம்யாண்டுகொண்டருச்சித்தேத்தினான்.

உபதேசகாண்டம் குருமான்மியச்சருக்கம்.

ஆதலாற்சிவனருச்சனையாகமத்தடைவே
நீதினற்குருமொழிவழிசெயப்படவேண்டு
மோதுமஞ்செழுத்தாதியவுணர்த்துநரன்றிப்
பேதபேதமிட்டோதினர்பிழைத்திடார்நரகம்.

வேதாகமவியல் முற்றிற்று.

கணபதிதுணை.

# சிவதூஷண பரிகாரம்

## தேவநிச்சயவியல்.

### தேவனொருவன் இருக்கின்றான்.

ஆண்வடிவமாகியும் பெண்வடிவமாகியும் அலிவடிவமாகியும், அன்றியும் ஓரியல்பின்றிய அநேக வடிவங்களாகியுந் தோன்றிநின்று அழிகின்ற உலகத்தினுக்கு ஒரு கருத்தா இருத்தல் வேண்டும்.

அக்கருத்தாவும் வேதங்களாலும் ஆகமங்களாலும புராணங்களாலுந் துதிக்கப்பெற்றவனுமாயிருத்தல் வேண்டும். அத்துதியும் முகமனுகத்துதித்தலின்றி விதியாகவே துதிக்கவேண்டும்.

அக்கருத்தாவினுக்கு மேலாகவுஞ் சமமாகவும் வேறொரு கடவுள் இல்லாதிருக்கவேண்டும். அக்கருத்தா உலகமெல்லாம் உதிக்குமுன்னம் உள்ளவனுகவும், உலகமெல்லாம் அழிந்த பின்னும் தான் அழியாமல் இருக்கவேண்டும். அக்கருத்தா முன்னும் ஒரு காலத்திலே உதித்துப் பின்னும் ஒரு காலத்திலே நாசத்தை அடையா திருக்கவேண்டும். அக்கருத்தா ஒரு கா

லத்திலே ஞானியும் வேறொருகாலத்திலே அஞ்ஞானியும் முன்னே ஒருகாலத்திலே அஞ்ஞானியும் பின்னே ஒருகாலத்திலே ஞானியும் ஆகவே இல்லாது எக்காலமும் ஞானியாகவே யிருக்க வேண்டும். அக்கருத்தாச் சிலதொழில் தம்மாலே செய்தும் சிலதொழில் செய்யச் சத்தியில்லாமல் இருத்தல் இல்லாமல் எல்லாந்தான் செய்யச் சத்தியுள்ளவரா யிருத்தல் வேண்டும். அக்கருத்தாச் சிலவற்றை அறிந்து சிலவற்றை அறியாமலுள்ளவராய் இராமல் எல்லாம் அறிந்தவரா யிருத்தல் வேண்டும். அக்கருத்தாச் சிலவிடத்திலே விருப்பும் சிலவிடத்திலே வெறுப்பும் இல்லாமல் எல்லாவிடத்திலும் விருப்புடையரா யிருத்தல் வேண்டும். அக்கருத்தா எவர்கள் எதை விரும்பிக் கேட்டார்களோ அதை அவர்களுக்குப் பூரணமாகவே கொடுக்கத் தக்கவரா யிருத்தல் வேண்டும். அக்கருத்தா சிலபொருள் உள்ளவராயும் சிலபொருள் இல்லாதவராயும் இராமல் எல்லாப் பொருளும் உள்ளவரா யிருத்தல் வேண்டும். அக்கருத்தா ஓரிடத்திலே யுள்ளவராயும் ஓரிடத்திலே இல்லாதவராயும் இராமல் எல்லாவிடத்தும் உள்ளவராய் இருத்தல்வேண்டும். அக்கருத்தா ஒருபொருளில் இருந்தும் ஒருபொருளில் இல்லாதவராயும் இரா

மல எல்லாப் பொருளிலும் உள்ளவராய் இருத்தல் வேண்டும். அக்கருத்தா உருவம், அருவம், அருவாருபம் இல்லாதவராய் இருத்தல் வேண்டும். அக்கருத்தா தாமத இராசத சாத்துவித குணத்தில் ஒருகுணமும் இல்லாது நிர்க்குணராய் இருத்தல்வேண்டும். அக்கருத்தா உலகமெல்லாந் தமக்குள் அடங்கவும் அடங்கிய உலகம் பின்பு தமமில் நின்று உதிக்கவும் இடமுடையராய் இருத்தல் வேண்டும் அக்கருத்தா நல்வினையுந் தீவினையுஞ் செய்யாதிருத்தல் வேண்டும். அக்கருத்தா தாமொன்றுஞ் செய்யாமல் தனது சத்தியைக்கொண்டு எல்லாவற்றையுஞ் செய்விக்க வேண்டும். அக்கருத்தா ஆன்மாவையுடையிருத்தல் வேண்டும்.

சிவஞானசித்தியார்.

ஒருவனோடொருத்தியொன் றென்றுரைத்திடு முலகமெல்லாம்
வருமுறைவந்துநின்று போவதுமாதலாலே [லாய்
தருபவனொருவன்வேண்டுந் தானுமுதலீறுமாகி
மருவிடுமநாதிமுத்தசித்துருமன் னிநின்றே.

ஒழிவிலொடுக்கம்.

டென்னை லயாய்ப் பிடித்துவளாந்தேயழியு
மென்னுதடேதமியல்பி ன்றிப் - பண்ணுங்காற்
காரணகர்த்தாவொருவனுண்டவனைக்காட்டுறா
வாரணமுமாகமமுமாம்.

## திருவுந்தியார்.

அண்டமுதலாயவனைத்தையுமுட்கொண்டு
கொண்டதைக்கொள்ளாதேயுந்தீபற
குறைவற்றசெல்வமென்றுந்தீபற.

## திருக்களிற்றுப்படியார்.

வானகமுமண்ணகமுமாய்நிறைந்துநின்றொருவனை
ஞானகத்தேயுன்றுமதங்கொன்றனையே - மேனகந்து
வாதனையைமாற்றும்வகையதுவேமனமுந்தமா
மாதனமேயன்றேயதற்கு.

## திருவருட்பயன்.

அகரவுயிர்போலறிவாகியெங்கு
நிகரிலிறைநிற்குநிறைந்து.

பல்லாருயிருணரும்பான்மையனமெய்ம்மையொருவ
னில்லாதானெங்களிறை.

## உண்மைவிளக்கம்.

அக்கரங்கட்கெல்லாமகரவுயிர்நின்றாற்போல்
மிக்கவுயிர்க்குயிராய்மேவினேம் - ஒக்கவண்ணு
நில்லாவிடத்துயிர்க்குயில்லாதறிவென்று
நல்லாகமமோதுநாடு.

## சிவஞானபோதம்.

நிற்குணனாய்நின்மலனாய்நித்தியானந்தனாய்த்
தற்பரமாய்நின்றதனிமுதல்வ - னற்புதம்போ
லானாவறிவாயளவிறந்துதோன்றானே
வானேமுதல்களையின்வந்து.

சிவப்பிரகாசம்.

பலகலையா கமவேத மியாவையினுங் கருத்துட் டதிபசு பாசந்தெரித்தல் பதிபரமே யதுதா, னிலவுமரு வுருவின்றிக் குணங்குறிகளின்றி நின்மலமா யேகமாய் நித்தமாகி, பலவிலுயிராக குணாவாகி யசலமாகி ய கண்டித மாயானந்த வுருவாயன்றிச், செலவரிதாய்ச் செல்கதியாய்ச் சிறிதாகிப் பெரிதாய்த் திகழ்வதுதற் சிவமென்பா தெளிந்தோரே.

சிவஞானசித்தியார்.

சிவனுருவருவுமல்லன்சித்தினோடசித்துமல்லன
பவமுதற்றொழில்களொன்றும்பண்ணிடவானுமல்லன்
றவமுதலியோகபோகந்தரிப்பவனல்லன்றானே
யிவைபெறவியைந்துமொன்றுமியைந்திடாவியல்பினானே

அக்கருத்தாச்சிவம்.

சர்வ வல்லவனென்றும், அமலனென்றும், சர்வ பரிபூரண னென்றும், சர்வகாரண னென்றும், சர்வ லோக நாயகனென்றும், சர்வ சீவதயாபர னென்றும், சர்வ காரியகாரண னென்றும், சர்வ ஞானகாரண னென்றும், சர்வதேவ சிகாமணி யென்றும், சங்கர னென்றும் சிவத்தைநோக்கி வேதாகமபுராணங்கள் துதித்தலால் அக்கருத்தாச் சிவபெருமானைகவே யிருக்கவேண்டும்.

## சிவபெருமானுக்கன்றி ஏனையதேவருக்கடாது.

வேதாகம புராணங்களும் மற்றும் நூல்களும் சிவபெருமானைத் துதித்தது போலவே பிரமனையும், விட்டுணுவையும், சூரியனையும், அக்கினியையும், துதித்தாலும், அத்துதிகள் முகமனே ஆம். அது என்போலவேயெனில், சங்கராதிகளில் ஒருவனைச் சூத்திர னென்றும், சூத்திரனை வைசிய னென்றும், வைசியனை அரசனென்றும், அரசனை அந்தண னென்றும், அந்தணனைத் தேவனென்றும், தேவனை இந்திரனென்றும், இந்திரனைப் பிரமனென்றும், பிரமனை விட்டுணு வென்றும், விட்டுணுவைச் சிவனென்றுங் கூறுவார்கள். அன்றியும் பூமியிலே பிரமனுக்கு ஆலயமும் உருவமும் உருவத்தைப் பிரமனெனவே பாவித்துச் செய்யும் பூசையும் இல்லாததினால் பூமியிலேயுள்ள வேதப் பிராமணரைப் பிரமனென்றே பாவித்துப் பூசிக்கிறார்கள். அன்றியும், மந்திரியைத் துதிக்கும் போது அம்மந்திரிக்கு ஆணையைக் கொடுத்த அரசனுடைய புகழெல்லாவற்றையுஞ் சொல்லித் துதிப்பார்கள். இவைகளெல்லாம் முகமனே ஆம். சிவபெருமானைத் துதித்தது பிரமாதியரை முகமனாகத் துதித்தது போலவன்று.

### கந்தபுராணம் உபதேசப்படலம்.

ஆதலாலீசனல்லாவனைவாக்குமுயிர்க்குமைந்தாம்
பூதமானவைக்குமேற்றம்புகலுதல்முகமனாகு
மோதலாமேலீதாகவொருபொருள்புகழவேண்டின்
வேதபாரகனாயன்றேயானெனவிளம்புகின்றா.

### கந்தபுராணம் சூரனமைச்சியற்படலம்.

அச்சுதன்னயனமரராகியபெயரவாக்கு
நிச்சயம்படுமுகமனேயானபோனினது
வச்சிரத்தனியாக்கையுமழிவிலாவரமு
முச்சகந்தொழப்பல்லுகமிருத்தலாய்முடியும்.

### கந்தபுராணம் அவைபுகுபடலம்.

மாலுடைத்தனைத்தேவென்பாவானகத்தவனை
யேனைமுத்தொழில்வலொன்பரிருவாநங்களையு
மானிலத்தினிற்பரம்பொருளிவனெனநவில்வா
ரானசொற்றிறமுகமனேசரதமற்றன்றால்.

### சிவபெருமானைத்துதித்தது துதிவாதமன்று விதிவாதமென்பதற்குப் பிரமாணம்.

### கந்தபுராணம் அவைபுகுபடலம்.

ஆபபுல்லியபுகழ்ச்சிபோற்கொள்ளலையறிவோர்
தேயமாவதியாக்குமெட்டாததுதனியிற்
றூயவீடுபேறருளுவதுபகிடத்துணிவாம்
மெய்ம்மையாவதுபுகலுவன்கேளென்வகுப்பான்.

## பிரமன் தக்கனுக்கு வேதஞ் சிவனைத் துதித்ததென்பது.

பிரமன் தக்கனைநோக்கி உபதேசித்ததாவது வேதமானது பிரமனாகிய என்னையும், விட்டுணு வையும், சூரியனையும், அக்கினியையும் பரமெனவே துதிக்கும்போது சிவபெருமானைத் துதித்து துபோலவே ஒருதுதிகளாலுந் துதித்ததுண்டோ சிறிதாகவே எங்களைத் துதித்த துதியும் முகமனே ஆம். வேதமானது ஓரிடத்திலே பிரமனாகிய என்னைத் துதிக்கும், ஓரிடத்திலே விட்டுணுவைத் துதிக்கும், ஓரிடத்திலே சூரியனைத் துதிக்கும், ஓரிடத்திலே சந்திரனைத் துதிக்கும், ஓரிடத்திலே ஆனமாவைத் துதிக்கும், ஓரிடத்திலே பஞ்சபூதியங்களைத் துதிக்கும், இத்துதிகள் குற்றமன்று. எப்பொருளைத் தேவனென்று எவர்கள் வணங்கினாலும் அவைகள் சிவபெருமானிடத்திலே சேரும். என்னையும் பிரமாவையும் வேதந் துதித்த துதியெல்லாஞ் சிவபெருமானிடத்திலே சேரும். அது எது போல என்னில், நதிகளெல்லாங் கடலுட் சேருமா போல், உலகங்களெல்லாவற்றையும் உதிப்பித்து காத்து போக்கி பின்பு அவ்வுலகங்களை யுதிக்கச் செய்கின்றவனும், அவ்வுலகங்களிலுள்ள சீவர்கள்மேல் இரக்கம்வைத்து ஆளுகின்றவ

னும், ஆதி அந்தம் இல்லாதவனும், பிரமனாகிய நானும், விட்டுணுவுந் தேடிக்காணாதவனும், ஆண் பெண் அலி அல்லனும், பசு பதி ஆகியவனும், பிரமனாகிய என்னையும் விட்டுணுவையும் சொல்லாநின்ற எவைகளையுஞ் சங்கரித்து இவர்கள் எல்லாரிலும் மேலோனென்று தன்னை ஆரும் வந் திறைஞ்சும்படிக்கு நாங்கள் வெந்து நீறின நீற்றையும் என்பையும் தனது திருமேனியிலே அணிகின்றவனும், சகல சீவர்களுக்கு முத்தி கொடுக்கின்றவனும், சிவபெருமானொருவனென்றே நாலுவேதமும் உபநிடதங்களுஞ் சொல்லுமே ஆனால் வேறுமொருசாட்சி வேண்டுமோ. அன்றியும், சிவபெருமானுடைய திருவருளின்றி ஆன்மாக்கள் துன்பத்தை நீக்கி முத்தி அடைதல், ஆகாயத்தைப் பிடித்து அதின் தோலை உரித்து உடுப்பதற்கு நிகரொன்றே வேத[illegible]து சொல்லில் வேறுமொருசாட்சி வேண்டுமோ.

கந்தபுராணம் உபதேசப்படலம்.

காரொழில்புரையுமேனிக்கண்ணனையென்னைப்பின்னை
யாரையும்புகழும்வேதமரன்றனைத் துதித்ததேபோ
லொருவாவிளம்பிற்றுண்டோவுரைத்ததுமுகமனென்றே
பேருலகறியமுன்னும்பின்னரும்விலக்கிற்றன்றே.

நான்மறைதனிலோங்காரமாகடவுட்சென்னி
மேன்மையதியம்புமெம்மைவிண்ணவர்தம்மையேனைப்
பான்மைகொள்பூதந்தன்னைப்பல்பொருடனையும்பாதி
தான்மொழிந்திடுமாலீதுதவறலவுணர்திதக்கோய்.

யாதொருபொருளையாவரிறைஞ்சினுமதுபோய்முக்க
ணாதியையடையுமாவங்கதுபோலத்தொல்லை
வேதமதுரைக்கின்றவியன்புகழனைத்துமேலா
நாதனையணுகுமெல்லாநதிகளுங்கடல்சென்றென்ன.

கேளினிமைந்தவேதக்கிளையெலாமியம்புகின்ற
சூளுரைசிவனேயெல்லாந்தோற்றுவித்தளித்துமாற்றி
மீளவுந்தருகின்றானும்வியனுயிர்க்கருளைநல்கி
யாளுநாயகனுமாதியந்தமிலோனுமென்னும்.

அத்தனும்பகவன்றானுமருவமுமுருவுமாகுஞ்
சுத்தனுமுணர்தற்கொண்ணாச்சோதியுமியாண்டுமேவுஞ்
சித்தனுமநாதிதானுந்தேவர்கடேவுமென்று
நித்தனுமுயிர்க்குணீங்காநிருத்தனுமவனேயென்னும்.

மூன்றெனுமுலகந்தன்னின்முளைத்திடுபொருளையெல்லா
மீன்றருள்புரியுந்தாதையெனுந்திரயம்பகனும்யார்க்குஞ்
சான்றெனநிற்கின்றோனுந்தாணுவும்பரனுந்தன்னைப்
போன்றவருயாந்தோரில்லாப்புங்கவன்றானுமென்னும்.

அண்ணலுமேகன்றானுமளப்பருங்குணத்தினானுங்
கண்ணனுமயனுந்தம்மாற்காணியகில்லான்றானும்

பெண்ணோடாணலியதென்னும்பெற்றியிலோனும்யாரு
மெண்ணியவெண்ணியாங்கேயீபவன்ருனுமென்னும்.

விதிமுதலுனைக்கின்றவியனுயிாத்தொகைகட்கெல்லாம்
பதியெனவருரூந்தொன்மைப்பசுபதிதானுமன்னோக்
கதிகனென்றெவருந்தேறவாங்கவாதுஞ்சவெந்த
பொதிதருபலியுமென்பும்புனைபவன்ருனுமென்னும்.

ஊன்புகுமெவனையுந்தன்ஞென்குணத்தொடுக்கித்தா
வானபுகலாகிநின்றுமற்றவாகுணங்களூடு [னே
தான்புகலில்லாதோனுந்தன்னியல்லினயதென்றே
யான்புகலரியதேவுமீசனுமவனேயென்னும்.

ஆன்றியுமொன்றுகேண்மோவமபயனுதியாகி
நின்றவதமமையெல்லாநீக்கியச்சிவனென்றுள்ள
வொன்றொருமுதல்வன்ருனேயுய்த்திடுமுத்திவேண்டி
யென்றுமஃதியம்பிற்றெனனின்யாவரோதேவராவா.

பரசிவ ஞனாச்சியின்றிப் பல்லுயிாத் தொகையு மென்
றும் பிரவிய துயாக்கிறெய்தி விடுபே றடைதுமென்ற,
துருவமில் விசும்பிற்றேலை யுரித்துடுப் பதற்கொப் பெ
ன்றே, பெருமறை யியமபிற் றென்னிற் பின்னுமோா சா
ன்றுமுண்டோ.

## புராணங்களினலே தேவநிச்சயமறிதல்.

பதினெண புராணங்களில் சிவபுராணங்
கள் பத்தும் சிவனுடைய புகழை உண்மையாக
வே சொல்லுகின்றன. மற்றையர் புராணங்கள்

எட்டும் அவர் அவர்களிடத்து இல்லாத புகழை முகமனுகவே சொல்லுகின்றன. அவர் அவர்கள்செய்த குற்றங்களை மறைக்கின்றன குணங்களை விரிக்கின்றன. இதனுண்மையை வேதங்களாலும் அவர் அவர்கள் புராணங்களாலும் அறியலாம்.

கந்தபுராணம் அவையடக்கம்.

சொல்லியபுராணமாந்தொகையுளீசனை
யல்லவா காதைகளனையாசெய்கையு
ளல்லனவிரிந்திடுநவைகண்மாறுறிடு
மில்லதுமுகமனுலெடுத்துக்கூறுமே.

பிறையணிசடைமுடிப்பிரான்றன்காதைக
ளிறையுமோாமறுவிலயாவுமேன்மையே
மறைபலசான்றுளவாய்மையேயவை
யறிஞாகணுடியேயவற்றைக்காண்கவே.

**விட்டுணுபுராணங்களினுல் அரிஅரனுண்மை அறிதல்.**

விட்டுணுபுராணங்களில் ஒன்றுகிய பாகவத புராணம் விட்டுணுவை நிந்தைசெய்து, சிவபெருமானைத் துதித்தது.

அஃதெப்படி யெனில்,

தேவர்களும் அசுரர்களும் விட்டுணுவுங்கூடி மந்தரமலையை மத்தாக நிறுத்தித் திருப்பாற்

கடலைக் கடைந் தமுதமெடுக்கும்போது தேவர்களும் அசுரர்களும் இளைத்த செய்தியைக்கண்ட விட்டுணுவானவர் அவர்களை நோக்கி நீங்கள் கடைதலை விடக்கடவீர்களென்று அவர்களை நிறுத்தி அந்த விட்டுணு அழகியகைக ளாயிரம் பொருந்தி, அக்கைகளால் கடலின்கண் னிறுத்திய மந்தர மலையானது அதிக வேகத்துடனே சுழலும்படி சுழற்றிக் கடைந்தார். தேவர்களும் அசுரர்களும் அதிசயிக்க விட்டுணு தனது ஆயிரங் கைகளினாலே அதிக வேகத்துடனே மந்தரமலையைச் சுழற்றிக் கடலைக் கடையும் போது அக்கடலின் கண்ணுள்ள சற்பங்களும், திமிங்கிலங்களும், மகரங்களும், மற்றுஞ் சீவன்களும் உடல்வருந்தி அலைய அப்போது வடமுக அக்கினியானது அஞ்சும்படிக்கும் அந்தரஞ், சுவர்க்கம், பூமி, ஆகிய மூவுலகமும், திசைகளெட்டும் மறைந்துபோகவும் சர்வ சங்கார காலத்திலே பிரமனையும் விட்டுணுவையும் திரிலோகங்களையும் மற்ற எவைகளையுஞ் சங்கரிக்கும்பொருட்டு, உருத்திரன் தாமதகுணம்பொருந்திக் கோபிக்க, அப்போது எழுந்த அக்கினியிலும் பத்துப்பங்கு அதிகமாகவே கரியநிறத்தோ டெழுந்தது. கொடிய ஆலகாலவிடம். இவ்வகையாகவே கோபங்கொண்டு வருகின்ற ஆல

காலவிடத்தைக் கண்ட தேவர்களும் அசுரர்களும் அஞ்ச, இதனைக்கண்ட விட்டுணுவானவர் சுரர் அசுரர்களை நோக்கி இவ்விடத் தெழுகின்ற ஆலகாலவிடமானது உங்களைக் கொல்லாவகை தடுக்கின்றேன் அஞ்சாதிருங்களென்று சொல்லி ஒரு கணப்போது கோபித்துவருகின்ற ஆலகால விடத்துக் கெதிரோநின்று தடுக்க அவ்விடமானது விட்டுணுவினுடைய தேகத்தை முழுவதும் மறைத்து எரிக்க, அத்தேகங் கருகியது. ஆலகாலவிடமானது விட்டுணுவினுடைய தேக முழுதையும் மறைத்து எரிக்க, அவ்விட்டுணு வானவர் சிவபெருமான்கொண்ட நவவடிவில் ஒருவடிவினையுடையர் ஆதலாலும். சிவபெருமானுடைய நான்கு சத்திகளில் ஒரு சத்தி ஆதலாலும். சிவபெருமானுடைய அடியார்களுள் முதலடியார் ஆதலாலும், தேகமானது கருகப்பெற்றனரே அன்றிச் சாம்பராக எரிந்திலர். அன்றியும். சிவபெருமான் தாமதகுணம் பொருந்திக் கோபிக்கும்போது அப்போது உதிக்கின்ற அக்கினியினாலே சாம்பராவதன்றி, வேறொரு வகையினாலே சாம்பராய் எரிந்து நாசமடையப் பெற்றிலர். ஆதலா லுயிர்பெற்றனர், விட்டுணுவானவர் ஆலகாலவிடத்தால் மூடப்பெற்று மறைந்து போக, இதனைக்கண்ட தேவர்களும் அசுரர்க

ளும் விட்டுணுவானவர் ஆலகாலவிடத்திஞல் மூடப்பட்டு, அவ்விடமயமாஞெருன் றஞ்சி அவ் விடம் நீங்கிக் கயிலாயத்தின் கண்ணே அதிக விரைவாக ஓடிச் சென்று, சிவசிவ யுமக்கபைய மென்றும்; பிரமஞகவே உலகங்களை யுதிக்கச் செய்தும் அவ்வுலகங்களை விட்டுணுவாகவே கா த்தும் பின்பு அவ்வுலகங்களை யுருத்திரஞகவே சங்கரித்தும் ஆன்மாக்களுக் கருள்புரிந்த ஆதி யே சோதியே அமலனேயென்றும், திரிபுராதி களைச் சிரித்தெரித்து எமது துன்பங்களை நீக் கின சிவபெருமானே சிவபெருமானே உகாந்த காலனேயென்றும், ஆலகாலவிடமானது அக்கி னியைக கக்கிக்கொண்டு சத்த உலகங்களையும் விழுங்கவந்தது உமது பாதமே சரணம் எமது யுயிரைக் காத் தருள்புரியவேண்டுமென்று தே வரும் அசுரரும் ஒருமுறைபோலவே பலமுறை துதிக்கச் சிவபெருமான் றனது திருச்செவியிஞ லவர்கள் துதியை யேற்று அவர்கள்மேலே அ ருள் சுரந்து, தேவர்களே அசுரர்களே நீங்கள் அஞ்சாதிருங்களென் றபயங்கொடுத்து தனது பக்கத்தின்கண்ணிருந்த சுந்தரரை அழைத்துச் சமுத்திரத்தின்கண் நின்றுதித்து இவர்களுக் கிடுக்கொடுத்த ஆலகாலவிடத்தை இவ்வி டத் கொண்டுவாவென்று சிவபெருமான் சு

தரனை நோக்கிக் கட்டளையிட, சுந்தரர் அக் கட்டளையைத் தலைமேற்கொண்டு தேவர்கள் அசுரர்கள் விட்டுணு ஆகிய இவர்களை வருத்திய ஆலகாலவிடத்தைத் தனது கையினாலே பிடித்துச் சிவபெருமான் முன்னிலையிற் கொண்டுவர அவ்விடத்தைச் சிவபெருமான் றனது திருக்கரத்தினு லேற்றனர். அவ் விடமானது தாமரை மலரின்கண் ஒருசிறிய வண்டானது இருந்தது போலவே சிவபெருமானுடைய திருக்கரத்திலே இருந்தது. அதன்பின்பு சிவபெருமான் தேவர்களையும் அசுரர்களையும் விட்டுணுவையும் நோக்கி இவ்விடத்தைத் தூரத்தில் எறிவதோ அல்லது எனது கையில் இருப்பதோ உமது கருத்தென்னென்று வினவ அதனைக்கேட்ட விட்டுணுவானவர் தேவரீருடைய அருள் சிறிதேனும் பெறுமல் நாம் கடல்கடைந்ததினுல் இவ்வளவு கெடுதி நேரிட்டது. தேவரீருடைய திருக்கரத்திருத்தலால் இவ்வாலகால விடமானது சிறிதாயது தேவரீர் திருக்கரத்தினின்று நீங்குமாயின் பின்னும் நம்மை வருத்தும். முதற்பாகம் தேவரீருக் குடையதெனவே வேதம் விதித்தது. நாம் அமிர்தமெடுத் துண்ணும் பொருட்டுக் கடல் கடைந்தோம். அக்கடலின்கண் முதலிலுதித்தது ஆலகாலவிடம். ஆதலால் வேதத்

றிற் சொல்லியபடி தேவரீர் இவ்விடத்தைத் திருவமுது செய்யவேண்டுமென் றிரப்பச் சிவபெருமானதனைத் திருச்செவியிலேற்று அவ்விடத்தைத் திருவமுது செய்தருளினர். அன்றுமுதல் சிவபெருமானுக்குக் காளகண்டனென்றும் விட்டுணுவுக்குக் காளமேனியனென்றுஞ் சுந்தரருக்கு ஆலாலசுந்தரரென்றும் திருநாம முண்டாயிற்று.

விட்டுணுபுராணங்களில் ஒன்றாகிய
பாகவதபுராணம் கூர்மப்படலம்.

சுரரொடு மசுரர் சுழலுமந் தரத்தைக் கடைந்துதந்
உரவுரந் துலைய, வரியவர் மெலிவை யறிந்துநீ கடைத
லொழிமினென் றவரை நிறுத்திச், சரியில்சக் கரத்தோ
ளன்னெழிற் கரங்க ளாயிரங் கொடுசல தியின்கண்,
வலனுமுன் னிடத்தான் வலனுறக் கடைந்தான் வானவர்
தானவர் மருள.

நெடியனகரங்க ளாயிரங்கொண்டு நிகரிலா மந்தரஞ்
சுழலக், கடையுமுக் கிரத்தா லுததியிற் றிரியுங் கட்செவி
திமிங்கலமகர, முடல்மறு கிடப்பல் சீவனு முலைய விவை
யெலா மோருருவாய, வடவனா மறுக வெழுந்ததங்கால
விடந்திசை வானமண் மறைய.

கடையுகச் சுசியிற் றசமடங் காகிக் கருமையா யெழுந் தெரி கொழுவிப், படிமிசைவான மயாந்துவந் திடநற் பரமனே மூடிய தென்றே, யுடனடுங்கச் சுராசுர ரோடும் வெருவி யோடிவெண் கயிலேயி னெய்திக்,ௗ கடிகமழ் கொன்றைச் சடையனே வணங்கிக் காவுனக் கபயமென் றனரால்.

அரியயனாரனுய்ப் படைத்தளித்தழிக்குமாறியாஞ் சோதியா மமலா, திரிபுர மெரித்தெம் மிடரினேக் களைந்த சிவசிவ·வந்தகாந் தகனே, யெரியெழுந் துலக மேழையும் விழுங்க வெழுந்திடு மாலமிவ் விடத்திற், சரணமுன் றுளெம மிடாகெடுத் தாளென் றுரைத்திடச் சங்கரன் மொழிவான்.

இரைதிரைக்கடலி லெழுந்திடுமால மிவ்விடத் தெய்திய தென்று, வெருவன்மி னென்றங் கருளியுத் தமியாய் விளங்கிய வுமையுட னறைவான், பரவுபகார மாகவவ் விடத்தைப் பாரணே பண்ணினுஞ் சரியில், அரிதிருவுள த்துக் குவப்பதா முதனு லரிவைநீ யஞ்சலை யென்றான்.

படிதிசைககன முதலெரித் திடவான் பரந்துவந்திடு மா விடத்தைக், கொடியிடைபாக னுலகெலா முவப்பக் கோமள வங்கையி னேற்பக், கடுகுபோலாந்தி ரண்டமாந்திடலும் கடிதினில் விழுங்கிடக் கண்டத், திடையினிலமர வெழிலுடைக்காள கண்டனும பெயரிறை யானன்.

## விட்டுணுவின் புராணமாகிய பாகவதம் விட்டுணுவின் நவையைமறைத்து சிவன்பெருமையை யுரைத்தல்.

தேவர்கள், அசுரர்கள், மந்தரமலையை மத்தாக நாட்டிச் சமுத்திரத்தைக் கடையும்போது, மந்தரமலையானது கீழே வீழ்ந்தது, அப்போது விட்டுணுவானவர் கூர்மவடிவெடுத்துக் கீழ்வீழ்ந்த மந்தரமலையை நிறுத்தினதும் கடலைக் கடையும்போது, இளைத்த அசுரரையையுஞ் சுரரையுங் கடையாமல் நிறுத்தி தான் ஆயிரங்கரத்தைப் பொருந்திக் கடலைக் கடைந்ததும் இவைகள் விட்டுணுவுக்குப் பெருமையே ஆம். விட்டுணு ஆயிரங் கரம்பொருந்தி அதிக வேகத்தோடு கடலைக் கடையும்போது அக்கடலின் கண்ணின்றா புறப்பட்ட ஆலகால விடத்தை அடக்கித் தேவர்கள் அசுரர்களைக் காவாமல் விட்டது விட்டுணுவின் சிறுமையே ஆம். விட்டுணுவானவர் கடலின்கண்ணிருந்து புறப்பட்ட ஆலகால விடத்தால் தேவர்கள் அசுரர்கள் காணும்படி மூடப்பட்டு அவ்வாலகால விடமயமா யிருத்தல் விட்டுணுவின் சிறுமையினுஞ் சிறுமையே ஆம். விட்டுணுவின் புராணமாகிய நாலும் விட்டுணுவின் நவையை மறைத்ததென்றது யாதினாலெனில் கடலின்கண்ணி

ருந்து புறப்பட்ட ஆலகால விடத்தைக்கண்டு தேவர்கள் அசுரர்கள் அஞ்சும்போது விட்டுணு வானவர் அவர்களை நோக்கி நீங்கள் அஞ்சாதிருங்களென்று சொல்லிக் கோபித்துவந்த ஆலகால விடத்துக் கெதிரே ஒரு கணப்போது நின்று அதின் கோபத்தை அடக்க, அவ்வாலகால விடமானது அடங்காமல் தமக்கெதிராக வந்து எதிர்த்து விட்டுணுவைமூடி மறைக்க விட்டுணுவானவர் தேகமானது கருகப்பெற்று அந்த இடத்தைவிட்டு நீங்கிக் கயிலாயத்திலே சென்று சிவபெருமானிடத்திலே அடைக்கலம்புகுந்து, உயிர்பெற்ற செய்தியையும் விட்டுணுவானவர் அநேகமாகவே சிவபெருமானைத் துதித்துத் தம்மைக் கொல்லவந்த ஆலகால விடத்தையுண்டு நமது உயிரைக் காத்தருள வேண்டுமென்று துதித்ததையுமாம்.

வயிணவர் வாய்மத கண்டனம்.

விட்டுணுவானவர் தேவர்களும் அசுரர்களும் ஆலகாலவிடத்துக்கஞ்சித் தம்மைவிட்டு நீங்கிக் கயிலாயத்திலே சென்று சிவபெருமானிடத்திலடைக்கலம் புகுந்து, அச்சிவபெருமானால் உயிர்பெற்றுய்ந்து தமது பக்கத்தின்கண் வருங்காறுந் தமது திதித்தொழிலை நடத்திக்கொண் டிருந்தாரோ, அல்லது சிவனையும் சிவாகமங்களையுஞ் சிவ

இன்னங்களையுஞ் சிவனடியார்களையும் நிந்தனை செய்கின்ற தமது அடியார்களாகிய வயிணவருக்கு அருள் புரிந்துகொண்டிருந்தாரோ, அல்லது, நமது பத்தர்களாகிய வயிணவப்பிணங்களைச் சுடுகின்ற சுடலையில் நின்றுகூத்தாடிய உருத்திரன் இருக்குங் கைலாயத்திலே தேவர்களும் அசுரர்களுஞ் சென்றார்களென்று துக்கம் பொருந்தியிருந்தாரோ, அல்லது கடலைக்கடைந்துகொண்டிருந்தாரோ, அல்லது தேவர்களும் அசுரர்களும் நஞ்சுக்கஞ்சி ஓடத் தாம் அந்த வேடிக்கையைப் பார்த்துக்கொண்டிருந்தாரோ, அல்லது திருப்பாற் கடலிலே ஆதிசேடன்மீது நித்திரை செய்துகொண்டிருந்தரோ, அலலது சீரங்கம், திருப்பதி, திருவல்லிக்கேணி முதலாகிய திருப்பதிகளிலே தமது அடியார்களாகிய வயிணவர்கள் கொடுத்த புளியோதனம், ததியோதனம், மிளகோதனம், வடை, தோசை, சக்கரைப்பொங்கல் ஆகிய இவைகளை யுண்டுகொண்டிருந்தாரோ, அல்லது தமது புகழை விளக்கவந்த இராமாநுஜாசாரியர் வேத சூத்திரத்துக்குச் செய்த பாஷ்யத்தை வாசித்துக்கொண்டிருந்தாரோ இச்செய்திகளி லொன்றையாவது விட்டு ஹரியின் புகழைக் கூறவந்த பாகவதபுராணம்

பேசாதிருந்தது வஞ்சகமோ; அல்லது நூற் குற்றமுண்டாகுமென்றோ அறியேம்.

தேவர்களும் அசுரர்களும் பிரமனும் விட்டுணுவும் ஆகிய இவர்கள் சிவபெருமானுடைய திருவருள்பெற்றுக் கடலைக் கடையாத காரணத்தினால் கொடிய ஆலகாலவிடமெழுந்ததென்றதற்குப் பிரமாணம்.

**உபதேசகாண்டம் கூர்ம அவதாரப்படலம்.**

கடைந்தகாலை நுண்டிவலைவெங்ககனபீதெறிப்ப
வுடைந்துபாற்கடல்சுழன்றதுமழுப்படையொருவற்
கடைந்துசொற்றிதுபுரிந்திலராநலினதன்டாற்
குடைந்தெழுந்ததுக்குநிறக்கொடுவிடங்கொதித்து.

நஞ்சுக்கஞ்சிய தேவர்கள் அசுரர்கள் காவெனவிட்டுணுவைத்துதிக்க அவர் தம்மாலாகாதென்று கயிலாயத்திற்சென்று சிவனுக்கபயமிட்டுயிர்பெற்றுய்ந்ததென்றதற்குப் பிரமாணம்.

ஷை

வெருவியோடினாவிண்ணவரசாவின்புரந்த
கருவிமாமழைவண்ணனும்புகலிடங்காணு
தொருவிநீங்கியவிண்ணவரொருவழிக்குழுமித்
திருவின்னுயகதடுத்திலேன்றலுமவன்செப்பும்.

என்னைபொட்பவராயிரகோடியரொனினு
முன்னருங்கொடுவிடத்தினையெதிரப்பவருளரோ

பின்னல்வேணியோன்றிருவருளாலேதனிற்பிழைப்பே
மன்னதில்லையேயெங்ஙனம்பிழைத்துமென்னறைந்தான்.

கடலின்கணிருந்து ஆலகாலவிடம் வெளிப்பட அதனைக்கண்டு விட்டுணு தடுக்கும்போது அவர்மேனி ஆலகால விடம்பட்டு கருண்டதென்றதற்குப் பிரமாணம்.

கந்தபுராணம் ததீசி யுத்தரப்படலம்.

தண்டுழாய்முடிப்பண்ணவனியாயதோர்தன்மை
கண்டுமந்தரங்காட்புவிட்டுள்ளமேற்கவற்சி.
கொண்டுநாமின்றுபோற்றுதுமீதெனக்குறியா
வண்டராதியாமேற்செலுமவிடத்தின்முன்னடுத்தான்.

மேல்வருங்கொடுவிடத்தின்முன்னுறுதலும்வெகுண்டு
சால்வங்கதுதாமரைக்கண்ணன்மேற்றுக்கி
மூலமுள்ளதோர்வச்சிரமணிநிறமுருக்கி
நீலவண்ணமேயாக்கியதவனுநின்றிலனால்.

நஞ்சுக் கஞ்சியோடின பிரமன் விட்டுணு தேவர்கள் அசுரர்களாகிய இவர்களைக் காக்கும்பொருட்டுச் சிவபெருமான் தமது பக்கத்தின்கண்ணிருந்த சுந்தரரைக்கொண்டு ஆலகால விடத்தைப் பிடிப்பித்துத் தனது திருக்கரத்திலேற்றதென்றதற்குப் பிரமாணம்.

ஷை

மாடுநோக்கினன்சுந்தரவருதியென்றருளி
நீடுவெவ்விடங்கொணாகெனநிகழ்த்தினனிமலன்
பாடகன்றெழுவிடங்கொடுநாயகன்பணிக்கை
யூடமைத்தனன்னிருந்ததத்திருக்கரத்தொடுங்கி.

தீயெனவெழுதருசீற்றவெவ்விட
மாயதைமாற்றியேயெளியாதங்களை
நீயருள்புரிகெனநீனிறந்திகழ்
மாயவனுரைத்தனன்வழுத்திநிற்கவே.

## அரன் அரிஅயன்ஆகிய மூவரில் அரனே பெரியன்.

அரன், அரி, அயன் ஆகிய மூவரில் அரன் சங்காரகர்த்தா, அரி திதி கர்த்தா, அயன் சிருட்டிகர்த்தா. அரனானவன் சங்காரந் திதி சிருட்டி ஆகிய முத்தொழிலையுந் தனது நினைவின்படி செய்வனே ஆம். அரி, அயன், ஆகிய இருவருஞ் சிவபெருமானுடைய திருவருளினலேதாங்கள் தங்களுக்குண்டாகிய ஒவ்வொரு தொழிலைச் செய்வார்களே ஆம். சிவபெருமானுடைய திருவரு ளில்லாதவிடத்து விட்டுணுவானவர் திதித்தொழில்செய்ய வல்லமையின்றி வலிமை குன்றுவர். பிரமனும் சிருட்டித் தொழிலைமறந்து வலிமை குன்றுவன். இவைகளெல்லாம் பதினெண்புராணங்களினல் அறியத்தக்கது.

## பாகவதபுராணம் கூர்மப்படலம்.

அரியயனரனாய்ப் படைத்தளித்தழிக்கு மாதியாஞ் சோதியா மமலா, திரிபுரமெரித்தெம் மிடரினைக் களைந்த சிவசிவ வந்தகனுந் தகனே, யெரியெழுந்துலக மேழையும் விழுங்க வெதிர்ந்திடு மாலமிவ் விடத்திற், சரணமுன்றுளெம் மிடாகெடுத் தாளென் றுரைத்திடச் சங்கரன் மொழிவான்.

## [illegible] நாச்சியார் திருவவதாரப்படலம்.

மூவருமாய் மூவருக்கு மிறைவனாய் முழுமுதலாய் முப்பத்து மூன்றுகோடி, தேவருமாய் முனிவருமாய் மறைகளாகித் திசையெட்டேழ் கடல்வரைபாரா தீவானுகிச், சீவனுமாய்ச் சீவனுள்ளி யங்குஞ்சோதித் திருவுருவாய்ப் பலவுருவாய்த் திகழுகின்ற, மாவருமணிமார்ப நின்னைக்கண்டு மகழ்வுறவே யென்செய்தேன் மதியிலாதேன்.

## [illegible] கண்ணன்திருவவதாரப்படலம்.

கஞ்சமேனை மலரோ னுருவென வுலகம் படைத்தியாழ்சுகனமீ தெழுந்த, வஞ்சனமேக மாயவுன் னுருக்கொண்டளித்தியா லளக்கரி னெழுந்த, விஞ்சிய நஞ்சை நுகருவோனாகித் துடைத்தண்டம் விண்டிடு மேனு, ளெஞ்சின மாவீடத்தி னிலையின்மேற் குழவியென வமர்ந்தீறி லாதிருட்டாய்.

## வயிணவர் திருவாய்மொழி.

மூவராகிய மூர்த்தியை முதல் மூவர்க்கு முதல்வன் றன்னைச், சாவமுள்ளன நீக்குவானைத் தடங்கடற் கிடந் தான் றன்னைத், தேவதேவனைத் தென்னிலங்கை யெரி யெழச் செற்ற வில்லியைப், பூவனாசனைப் பங்கயத்த டங் கண்ணனைப்பர வும்மினே.

திருமால் நான்முகன் செஞ்சடை யானென் றிவர்களெம்
பெருமான் றன்மையை யறியாரா ரறிகிற்பார் பேசியென்
ஒருமாமுதல்வா வூழிப் பிரானென்னை யாளுடைக்
கருமாமேனிய னென்பேனென் காதல் கலக்கவே.

## விட்டிணுவைத் துதித்தது சிவனிடஞ்சேரும்.

விட்டிணு புராணங்களிலும் வேதங்களிலும் விட்டிணு அடியார்களும் விட்டிணுவைச் சீட்டித் துதித்த துதியெல்லாம் விட்டிணு பக்கஞ் சேராமல் அவ்விட்டிணுவை யுண்டாக்கிக் காத்துச் சங்கரித்து மீளவும் உண்டாக்கிக் காத்து அருள் புரியுஞ் சிவ பெருமா னிடத்திலே சேரும்.

## அதற்கோர் திருட்டாந்தம் யாதெனில்.

விட்டிணு கடலைக் கடைந்தமிர்த மெடுக்கும் போது தாம் விரும்பிய அமிர்தம் உதியாததி னாலும்; விரும்பாத ஆலகால விடமுதித்ததி

ருலும், அவ்விட்டுணு பரதந் திரனே யன்றிச் சுதந்தரன அல்லன். விட்டுணு கடலைக்கடையும் போது அதிக கோபத்தோடுதித்த ஆலகால விடத்தை அடக்கச் சத்தி யில்லாததினுல். அவ் விட்டுணு சர்வ வல்லமை யுடையனல்லன் விட்டுணு கடலின் கண்ணிருந்து புறப்பட்டுத் தேவர்களையும் அசுரர்களையுங் கொல்லத் துணிந்த ஆலகால விடத்தை அடக்கித் தேவர்களைக் காவாததினுல் திதித் தொழில் அவரிடத் தெங்ஙன மிருந்தது. சிவ பெருமானுடைய திரு வருளில்லா விடத்து அவ்விட்டுணு திதித் தொழிலு முடைய னல்லன். விட்டுணு வானவர் சிவ பெருமா னுடைய திருவருள் பெருமல் கடல் கடைந்ததினுல் அக்கடலின் கண்ணிருந்து ஆல கால விடமானது அதிக கோபங்கொண்டு வந்தது. அவ் விடத்தை அடக்கச் சத்தி இல்லாமல் வந்த நஞ்சுக்கஞ்சி கயிலாயத்திலே சென்று சிவ பெருமானை வணங்க, அச்சிவ பெருமான் திருவுளமிரங்கித் தமது பக்கத்தின்கண் ணிருந்த சுந்தரரைக் கொண்டு கோபித்துவருகின்ற நஞ்சைப் பிடிப்பித்து அருந்தினுர், ஆதலால் யாரை நோக்கித் துதித்தாலும் அத் துதியெல்லாஞ் சிவபெருமா னிடத்திலே சேரும். அன்றியும் சிவபெருமா னுடைய திரு வருளொருவருக்

குண்டாகுமே ஆனால் அவர்களிடத்துச் சகல சத்தியு முண்டாகும். அதற்குச் சான்று விட்டுணுவால் அடக்க வொண்ணாத ஆலகால விடத்தைச் சிவபெருமா னுடைய திருவருள் பெற்ற சுந்தரர் அடக்கினதே ஆம். நாலு வேதங்களாலும் பதினெண் புராணங்க ளாலுந் துதிக்கப் பெற்றவன் சிவபெருமான் ஒருவனே ஆம். ஆதலால் அச் சிவபெருமானுக்கு ஒப்பாகவும் உயர்வாகவும் ஒரு தேவரில்லையே ஆம்.

பிரமன் முதாகிய தேவர்களோ
வயிணவர்களோ விவேகிகள்.

பாகவதபுராணம் கூர்மப்படலம்.

கடையுகச் சுசியிற் றசமடங்காகிக் கருமையா யெழூஉந் தெரி கொழுவிட், டடிமிசைவான மயாந்துவந் திடநற் பரமனை மூடியதென்றே, யுடனடுங்கச்சு ரரசுர ரோடும் வெருவியோடிவெள் கயிலையினெய்திக், கடிகமழ் [illegible]ன் றைச் சடையனை வணங்கிக் காவனக் கபயமென றனரால்.

விட்டுணு புகழைக் கூற வந்த பாகவத புராணத்தினுல் காண்கின்றது யாதெனில் விட்டுணு மந்தர மலையை மத்தாக நாட்டித் திருப்பாற் கடலைக் கடையும் போது ஆலகால விடமானது அப்பாற் கடலின் கண்ணிருந்து புறப்பட்

டு விட்டுணுவை ஏழ்ட அதனைக் கண்ட தேவர்கள அசுரர்களுடனே பயந்து அவ்விடம் விட்டு நீங்கிக் கைலாயத்திலே சென்று சிவ பெருமா னிடத்திலெ அடைக்கலம் புகுந்தார்களென்று காண்கிறது. விட்டுணு திதிகர்த்தாவும செகத்துக் கெல்லாம் நாதனுமாகிச் சிவன் பிரமனுகிய இருவரிலும் அதிகனே ஆயின் தேவர்கள் அசுரர்களுக்கு வந்த ஆபத்தைக் காவாமல் விடுவாரோ, அரியைச் சிவனுக்கு ஒப்பாகவும் உயர்வாகவும் உடைய னென்று கூறுவது பேதமையே ஆம்.

**பார்த்தனே வயிணவர்களோ விவேகிகள்?**

திரியோதனுதியர்களுடனே சண்டை செய்யும் பொருட்டுக், கண்ணபிரானுற் செலுத்தப்பட்ட தேரின் கண்ணே யிருந்து போர்க்களத்தை நோக்கிய அருச்சுன னவன் தனது கையிலிருந்த காண்டீபத்தைக் கீழே போட்டுக் கண்ணபிரானை நோக்கிக் கூறுவான் தேவனேபோர்க்களத்தின்கண்ணே நம்முடனே சண்டைசெய்து இறந்து போவதற் கேதுவாக வந்திருக்கின்றவர்கள் நமது பிதாவும், பிதாவி னுடைய பிதாவும், எனது சகோதரர்களும், எனக்கு ஞானத்தைப் போதித்தவர்களும், எனது ஆவிக்குச் சமானமானவர்களும், அறிவிலேசிறந்தவர்களும்; எனது

சிறுபிள்ளைகளும், பிள்ளைகளுடைய பிள்ளைகளு ம், எனது மாதுலர்களும் ஆகிய யிவர்களே ஆம். இவர்களைக்கொலை செய்வது மிகுந்த பாதகமே ஆம். இவர்களைக் கொலை செய்து இப்பூமியைப் பெற்றுக்கொள்பவனும் நமது துணைவனே ஆம். நாம் போருக்கு வரும்போது ஆகாத சகுனங் கள் ஒன்றல்ல அனேகங்களாம். அவர்களை நான் கொலை செய்து வருவதாகிய பிரயோசனம் ஒன் றையுங் காணேன். ஆதலால் இவர்களை நான் கொலை செய்வது யாது பயன் கருதி. எனது வாய் மலர்ந்ததே அன்றி முகமானது மலர்ந்தில. எனது மனமானது. ஒன்றையும் உணர மாட் டாமல் திகைத்தது எனது உடம்பானது அக் கினிக்குச் சமானமாக வேகுகின்றது. நானோ செவ்விதாக நிற்க மாட்டேன்; எனது கையிலே இருந்த காண்டீபம் நழுவிக் கீழே விழுந்தது. மாதாவைப் போன்ற கண்ணபிரானேயென்று அரிச்சுனனென்பவன் போர்செய்யுந் தொழிலை மற ந்து தேரின்மேலிருந்தான்.

பாரதம் அணிவகுப்புச்சருக்கம்.

யானையொடு தேரடிர வியாளிவைய நேகவித மெண் ணரிய தானையுடனே, சேனைமுத லாய்முனையினின் றருள் பிதா மகனுமற் றுளசெழுங் குரவரும், தானைநெடு மாரி

ரிடை தேரிடை யருககனென நின்றதுரி யோதனனும் வான், மீனெகா கேளிரு மணிந்தநிலே கண்டுருகி விபுத பதி மைந்தன் மொழிவான்.

சின்றமா தொடங்கதினை கிற்பவா பிதாமகனு நீள்கிளை ஞ்ரும் துணைவருங், கொன்றிவனை வாகுவலி யிற்கவா வதி தரணி யொள்பவனு மென்றுணைவனே, யென்றுபல பே யிதி பாதகமெனக்கருதி யான்மலேவு றேனினியெனு, வன்றுவசு தேவன்மக னேடுனைசெய் தானமரி லவனுமிவ னேடுனைசெய்வான்.

பகவற்கீதை.

தாவிலருந் தந்தையருந் தந்தையாதந் தந்தையரு மேவியு ன் பிறந்தாரு மெஞ்ஞான மளித்தாரு மாவியெனை நட்டாரு மான்றேரு மமாக்களத்தே மேவியவெம் பொருடாக வீடுவான் றொடங்கினா.

தீதறு சிறுவாமற் றவாகள் சேய்களு மாதுல ரிவாகளோ மாய்கின் றொனக் காதல்செய் திடரிறை கலக்க முற்றவன் மாதவ னென்றிசில மறித்துக் கூறுவான்.

வாயேயன்றி முகமல்ரா மனமொன்றுணர மாட்டாது, தீயேயென்ன வுடல்வெதும்புஞ் செவ்வேநிறக மாட்டு கிறேன், வேயே தருநின்காண் டீபவில்லு நழுவிவிழா நின்ற, தாயேயனையாய் பொரநின்ற தமரைக்காணுந் தெருமின்னே.

ஓதலாகாங்மித்தங்களொன்றேயல்லிபலவுளவாங்
காதலாளைக்கொன்றுபெறும்பயனேவொன்றுங்காணேனு
னுதலாலிவ்வென்றியுடனரசினுரிமையானதனை [ல்.
யேதலாவதென்கின்றதியாதின்பொருட்டேஎவியம்பாயா

## அருச்சுனனைக் கண்ணபிரான் துற்போதனை செய்து மயக்குதல்.

அருச்சுனு கேள் மாயை யென்று சொல்வதாகிய பெண்ணினிடத்திலே மனமென்று சொல்வதாகிய ஒரு மைந்தன் ரேன்றி அறிவென்று சொல்வதாகிய பிரமத்தை நவத்துவாரம் பொருந்திய தேகங்கடோறும் பொருந்தச் செய்து காவல் செய்து வைத்தான். பிதா மாதா மக்கள் மனையாள் முதலாகிய இவர்கள் மேல் வைத்த அன்பு அந்த மனத்தின் கண் தோற்றிய தென்றுணர்வாய். தேகத்தின் கண்ணே பொருந்திய கண் வாய் மூக்குச் செவி தேகம் ஆகிய பொறி வாயிலாகத் தோற்றிய சத்தப் பரிச ரூப ரச கந்த மென்று சொல்லிய இவைகளா லுண்டாகிய விடைய போகங்களை அனுபவித்து தாமத இராசத சாத்துவித குணங்களையும் காமக் குரோத லோப மோக மத மாச்சரியம் ஆகிய இவைகளையும் பொருந்தித் தேகத்தின் கண்ணே இருந்து அரசாளுவன் மன மென்று சொல்வதாகிய பகைவன். மன மென்று சொல்

வதாகிய பகைவனுற் தேகத்தின் கண்ணே சிறை யிருந்த அறிவாகிய பிரமத்தைச் சாக்கிரா அவத்தையிலே தெரிசித்தல் கூடாது. சொற்பன அவத்தையிலே தரிசிக்கலாம். இந்தச் சொற்பன அவத்தையிலே தோற்றிய அறிவாகிய பிரமத்தைத் தரிசித்தவர்களே அறிஞராவார். ஆராய்ந்து பார்த்தால் பகைவரு மில்லை உறவினரு மில்லை பிரிதிவி அப்பு தேயு வாயு ஆகாய மாகிய பஞ்ச பூதத்தினு லுண்டாகிய தேகத்துக் குள்ளே மன மென்று சொல்வதாகிய பகைவனுற் பிணிக்கப் பட்ட பிரமமானது இருந்து சகல தொழிலையும் நடத்து கின்றது. நான்தான் அந்தப் பிரமம், என்னை விட உலகமில்லை, நான் எங்கும் வியாபகன், நான் எல்லாப் பொருளுடைய யுள்ளவன், நீ யென்னில் வேறல்லன், சென்ற யுகத்திலே நீ இலக்குமணனாகவும் நான் இராமனாகவும் உதித்து இராவணனை முதலாகிய கொடிய இராக்ஷதரையும் கொடுங் கோல் அரசர்களையுங் கொலை செய்தோம், இந்தத் துவாபர யுகத்திலே நீயும் நானு மாகவே தோற்றிக் கொடுங் கோன் மன்னரைக் கொலை செய்யத் துணிந்து இந்தப் போர்க் களத்திலே வந்தோம், ஆதலால், நீ போர் செய்யத் துணிவா யென்று கண்ணபிரான் அருச்சு

அவ்வருச்சுனனானவன் கொண்டிருந்த சிவபத்தி யையும், சிவபூசையையும் விடுவித்தனரல்லர். அவ்வருச்சுனனும் அச்சிவபூசையை விட்டவன ல்லன். அதற்கோர் அடையாளம் பதின்மூன்று ம் போரில் அன்றிரவு கயிலாயத்துக்குக் கண்ண பிரானும் அருச்சுனனும் போம்போது அருச் சுனனானவன் மிகுந்த பசியையுடையவனாய் மா ர்க்கத்திலே வருந்தி யிருக்கக்கண்ட. கண்ண பிரான் அருச்சுனனை நோக்கிக் கூறுவார். இக் காட்டின்கண்ணே இருக்கின்ற வாழைக்கனி, மாங்கனி, பலாக்கனி, முதலானவற்றை அரு ந்தி யுன்னிடத்துண்டாகிய பசியை நீக்குவா யென்று கூற, கண்ணபிரானை நோக்கி அருச் சுனன் கூறுவான். "யான் இன்றிரவு சிவார்ச்ச னை பண்ணினவனல்லன். ஆதலால் சிவார்ச்சனை பண்ணாது யான் ஒன்றும் புசியேன். இப்போது சிவார்ச்சனை செய்வதற்குச் சிவலிங்கம் யாதொன் றையும் என் கண்ணிற் காண்கிலன். ஆதலால் நான் எப்படிச் சிவார்ச்சனை செய்வது. சிவார்ச் சனை பண்ணாமல் கனிகளை எப்படிப் புசிப்பது" என்று கூற, அதனைக்கேட்ட கண்ணபிரான் என்னைச் சிவலிங்கமாகவே பாவித்துச் சிவார்ச் சனைசெய்து அதன பின்பு கனிகளைப் புசித் து உனது பசியை நீக்குவா யென்ன, அதனைக்

கேட்ட அருச்சுனனனவன் மிகுந்த சந்தோஷமுடையவனுய தாபரங்களாகிய சில முதலானவற்றிலும் சங்கமங்களாகிய குரு முதலானவரிடத்திலுஞ் சிவபெருமான் வியாபகனென்று சிந்தித்து, இத்தக் கண்ணபிரானே நாராயணன், நாராயணனே சிவபெருமான் கொண்ட நவவடிவில் ஒருவடிவினை யுடையவன், சிவசத்திகள் நான்கில் ஒரு சத்தியாயுள்ளவன், சிவனடியார்களுள் முதலடியரா யுள்ளவன். அன்றியும், சிவபெருமானே நாராயணனிலே வியாபகனுயுள்ளவன். ஆதலால் இக்கண்ணபிரானைச் சிவலிங்கமாகவே பாவித்துப் பூசித்து அதன் பின்பு கனிகளை யுண்பேனென்று சிந்தித்துக் கண்ணபிரானைச் சிவலிங்கமாகவே பாவித்துப் பூசித்து அதன்பின்பு கனிகளையுண்டு தன்னிடத் துண்டாகிய பசியை நீக்கினுன்.

பாரதம் பதின்மூன்றும் போர்ச்சருக்கம்.

சரிந்துவா சரிவறத் தாங்குநாயகன்
டரிந்திவையுனாத் தலும்பாவைடங்கண்மேற
புரிந்திலனின்னமும் பூசையென்றனன்
வரிந்தவெஞ்சிலைக்குமன் மதித்தவீரனே.

மருவிருங்கானகமலரினெலையைமட்
பொருவருபூசனைபுரிதியையரீ

யிருவருமொருவரோயென்பதின்றுபோ
யருவனாயவனடியடைந்துகாண்டியே.

கண்ணன்மேலணிமலரனைத்துங்காயெரி
வண்ணன்மேற்காண்டலுமனங்களிட்புற
வெண்ணம்வேறிரண்டலவெநன்றுணராத்
தன்னனுமுடற்புளகரும்பிருனரோ.

## திருவாய்மொழி.

தீர்த்தனுலகளந்தசேவடிமேற்பூந்தாமந்
சேர்த்தியவையேசிவனடிமேற்றான்கண்டு
பார்த்தன்றெளிந்தொழிந்தபைந்துழாயான்பெருமை
பேர்த்துமொருவராற்பேசக்கிடந்ததே.

தாபரங்களாகிய சிலைமுதலானவற்றிலும் சங்
மங்களாகிய குருமுதலானோ ரிடத்திலும
சிவபெருமான் வியாபகனாகவேயிருந்து
பூசையேற்று அருள்புரிவனென்பதற்
குப் பிரமாணம்.

## சிவஞான சித்தியார்.

தாபரசங்கமங்க ளென்றிரண் டுருவினின்று
மாபரன் பூசைகொண்டு மன்னுயிர்க் கருளைவைப்ப
னீபரன் றன்னைநெஞ்சி னினைவையே னிறைத்தபூசை
யாய்பரம் பரனைநாளு மாச்சிரீ யன்புசெய்தே.

## பதின்மூன்றாம்போரில் அன்றிரவு அருச்சுனன் செய்த சிவபூசை.

நாராயணனுக்குள்ளே சிவபெருமான் வியாபகனாகவே யிருத்தலால், அருச்சுனனானவன் பதின்மூன்றாம்போரில் அன்றிரவு கயிலாயத்துக்குச் செல்லும் நெறியில் கண்ணபிரானைச் சிவபெருமானாகவே பாவித்துப் பூசைசெய்தானென்பதற்கு ஆதாரஞ் சிவபுராணமே ஆம். நாராயணனைச் சிவபெருமானாகவே பாவித்துச் சிவபெருமானுடைய திருநாமங்களாகிய அரகரதிரிபுரதகன திருநீலகண்ட திருநிஷ்கள அம்பிகைபாக சிவசிதம்பர அனவரத அம்பலவாண சபாபதி பாதமேதுணை யென்று துதிப்பார்களேயாயின் அவர்களிடத் துண்டாகிய ஆணவாதிபாசங்கள் நீங்கி அறம் பொருளின்பம் வீடாகிய நான்கு பயனையும் பொருந்துவர்.

## சூதசங்கிதை வேதார்த்தத்தை உரைத்த அத்தியாயம்.

மாயனுரிடத்துமுக்கண்ணுடைவள்ள
னேயமாவியாபகனெனத்தெரிதருநெறியோன்
வாயவாணவமுதலியமலமறப்பாற்றி
மேயவின்பமாமுத்தியையடைவன்மேதகையிர.

சங்கமேந்துகைநாரணன்முதலியோரா தம்மைச்
சங்கராசிவசம்புவேசாம்பமாதேவ
வெங்களுபகவெனத்துதித்தேத்திஞம்பாச
மெங்குமாகியதம்பிரானருளிஞலிரியும்.

## நானே பிரமமென்றுசொன்ன கண்ணபிரான் கயிலாயத்திலே சென்று சிவபெருமானை வணங்கல்.

முதலாம் போரிலே தேரிலிருந்து நானே பரம்பொருளென்று அருச்சுனனுக்குப் பகவற்கீதையை உரைத்த கண்ணபிரான், பதின்மூன்றாம்போரி லன்றிரவு அருச்சுனனுடனே கயிலாயத்திலே சென்று சிவபெருமானைக்கண்டு துதித்து அச்சிவபெருமானுடைய திருவருளினலே பதினலாம் போராகிய மறுநாளிலே அநேக உபாயங்களைச் செய்த அரசர்களையும் அவ்வரசர்களால் காவல்செய்த சயத்திரதனையும் அருச்சுனனைக்கொண்டு கொலைசெய்வித்தார். விட்டுணு சிவபெருமானில் அதிகனென்று அருச்சுனனுஞ் சிந்தித்திலன். வயிணவர்கள தங்கள் தேவனென்று சொல்லுவதற்கிய விட்டுணுவுஞ் சிந்தித்திலர். சிவபெருமானில் விட்டுணுவே அதிகனென்று சிந்திப்பவர் யாரெனில் ததீசி, கௌதமமுனிவர்களுடைய சாபத்துக் குட்பட்டு வருந்திய வைணவப்பிணங்கள்.

## பாரதம் பதின்மூன்றாம் போர்ச்சருக்கம்.

வெயிலெழுவதன்முனிவ்விசயன்றன்னெடுங்
கயிலையைப்பொருட்டனைக்கண்டுமீளவுந்
துயிலுணர்ந்திடும்படி தோன்றுவோமென
வயிலணியாழியானவனொடேகினன்.

செந்திருமடமயில்கேள்வன்சென்றுசெவ்
வந்திவானிறத்தினனருள்செய்வாய்மையா
லந்தியுள்விடுத்திடநரன்றனேந்தன்
புந்தியின்மகிழ்ந்துமந்திரத்துட்டோயினன்.

புரக்கையாவெரிபுராரிதன்முன
ரரிநெடுநாரணனணுகியன்பினு
ரணடங்கயமுறத்தாழ்ந்துடன்முறை
கரனுறமுகிழ்த்திடுகழறன்மேயினன்.

பொங்கராவெயிற்மணிப்பூணும்பேணுநீற்
றங்கராகமுமுவந்தணியுமேனியாய்
சங்கராமேருவெஞ்சாபம்வாங்கிய
செங்கராசிவசிவதேவதேவனே.

விண்ணிடைத்திரிபுரம்வெந்துநீறெழப்
பண்ணுடைச்செந்தழல்பரப்புமோரவா
வெண்ணுடைக்காமனையெரித்தபேரழற்
கண்ணுடைக்கடவுளேகாலகாலனே.

தருவதுமுயிரெலாங்காக்குந்தன்மையு
முருவறவொழித்தலுமுனாறனுடலே
கருவராமெநாழிந்தவாகருத்திற்கண்டுதே
ரொருவனேயெம்மனோக்குனைக்கட்புலனையோ.

நித்தனேநிமலனேநிகழ்நின்றுடனே
யத்தனேயடியவர்க்கெளியவண்ணலே
பித்தனேயாதியந்தங்கள்பேசொணா
முத்தனேயுயிர்தொறுமுலாயமுன்பனே.

என்றுபற்பலவுரையெடுத்துக்கூறியே
நின்றுளனெக்குநெக்குருகிநேயமோ
டொன்றுகண்ணருவிகளுகுத்தனோக்கியே
யன்றுமாபதியவர்க்கருள்செய்தானரோ.

இமையநல்வரையினிதீன்றகன்னிகை
யுமையவள்கணவனெவ்வுயிர்க்குநாயகன்
சமைவுறத்துதித்திடுமடியாதம்முக
மமைவுறுதிருவுளத்தருளினோக்கியே.

வேண்டுவகென்னெனவிண்டுதாழ்ந்தெழீஇப்
பூண்டருள்கருணையம்புனிதவிங்கிவ
னூண்டருள்படைகளாலவுணர்க்காய்ந்தன
னீண்டுநல்குதிவிறலெய்தும்வண்ணமே.

## கண்ணபிரான் சிவவிழாத் தரிசித்தது.

தனது மூத்த சகோதரனாகிய பலபத்திர னும், தனது சுற்றத்தாரும் அறியாதவண்ணம்

ஆனது தங்கையாகிய சுபத்திரையை அருச்சுன னுக்கு விவாகஞ்செய்து கொடுக்கும் பொருட் டுக் கண்ணபிரான் தனது தங்கையாகிய சுபத் திரையையும் சிவவேடம் பூண்டு தனது வடிவத் தைமறைத்து வந்திருந்த அருச்சுனனையும் துவாரகாபுரியிலே யிருக்கச்செய்து, தனது தமய னாகிய பலபத்திரனையும் மற்றுஞ் சுற்றத்தாரை யும் அழைத்துக்கொண்டு பெருந்தீவிலேயுள்ள சிவாலயத்திலே சென்று சிவபெருமானுடைய திருவிழாவைக் கண்ணபிரான் தரிசித்தார்.

பாரதம் அருச்சுனன்
தீர்த்தயாத்திரைச் சருக்கம்.

ஆறியுருவகையலாயுதன்முதல்வடமதுரை
மேசிறியும்யாதவாயாரையுந்தனனுடன்சேர்த்து
மறிகொள்செங்கையன்விழாவயர்வான்பெருந்தீவி
லூறியில்வெண்டயிருண்டவன்கொண்டுசென்றுற்றான்.

கூர்மபுராணம் கண்ணன் மணம்புணர்ந்த
அத்தியாயம்.

அருமறை யுரைத்த முக்கோற் பகவனு யடைதனேக் கி, யொருகுழை யொருவன்வேற்கட் சுடத்திரை யென் னுமொட்பில், திருவினை யன்னோர் கேவல் செய்தியென் றுரைத்த காலேக், கருமுகி றம்முனேடும் விழவுகண்ணு றுவான் போனான்.

ஆறறி புலவா நன்கின் வளர்த்திடு மழல்சான் றூ
நாறிடுங்கூந்தறன்னைவிசயனுக்கினிதுநல்கி
யூறுதேன்பிலிற்றுநொச்சிப்பூவுதிரிருளினெல்லை
சாறயாநகரினீசற்றொழுதுதம்முன்னோர்சார்ந்தார்.

## விட்டுணு தசஅவதாரங்கடோறுஞ் சிவார்ச்சனை செய்தது.

### விட்டுணு மச்சவதார சிவார்ச்சனை.

பிரமதேவர் கையிலே யிருந்த வேதத்தைப் பறித்துக் கொண்டுபோய்க் கடலுக்குள் ளொளித்திருந்த அசுரனை, நாராயணன் மச்சவடிவாகிக் கடலுக்குள் ளொளித்திருந்த அவுணனைக் கொலைசெய்து செருக்கடைந்து மகாமேருவை யொத்த திருமேனியோடு சத்த சமுத்திரமும் ஒன்றாகும்படி கலக்கி, மேற்கரையிலே தலையும், கீழ்க்கரையிலே வாலுமாக மாறி மாறிக் கிடந்து சத்தசமுத்திரத்தின் கண்ணுள்ள நீரானது உலகங்களெங்கும் பரம்பிக் கடலுக்குள்ளே நீரானது தம்முடைய முதுகானது நனைக்க நீரில்லாமல் வறளச்செய்து, கடலின்கண்ணுள்ள சீவன்களுக்கும் மூவுலகத்தின் கண்ணுள்ள சீவன்களுக்குந் துன்பமுண்டாகும்படி செய்தார். சுவர்க்கலோக வாசிகளாகிய தேவர்கள் மிகுந்த துன்பத்தைப் பொருந்திக் கயிலாயத்தின்கண்ணே சென்று சிவபெருமானைக்கண்டு துதித்

னார்கள். அத்துதிக்குச் சிவபெருமானிரங்கித் தமது பக்கத்தின்கணின்ற சாத்தானை நோக்கி, விட்டுணு மச்சவடிவத்தோ டடைந்திருந்த செருக்கினை அடக்குவாயென்று கட்டளையிட, குலப்படை யுடையோனாகிய சாத்தான் வலையர் வடிவெடுத்துச்சென்று மச்சவடிவத்தோடு சத்த சமுத்திரமும் ஒன்றுகும்படி செய்த விட்டுணு பக்கலிற்சென்று தமது திருக்கரத்திலிருந்த வலையைச் சத்தசமுத்திரமும் நிரம்பும்படி வீசி மச்சவடிவாகிய விட்டுணுவைப் பிடித்துக் கண்ணிரண்டையும் பிடுங்கிச் சிவபெருமான் றிருமுன்னிலையில் வைத்தார். அதனைக்கண்ட தேவர்கள் சிவபெருமானை வணங்கித் தேவதேவனே இக்கண்மணி இரண்டையுந் தேவரீருடைய திருமேனியி லணிந்தால் விட்டுணு தேவரீரைக் காணும்போதெல்லாந் தன்னிடத் துண்டாகிய செருக்கினை நீங்குவாரென்று பிரார்த்திக்கும் போது சிவபெருமானதற்கிசைந்து அக்கண்களிரண்டையுந் தமது திருமேனியிலே தரித்துக் கொண்டார். அதன்பின்பு விட்டுணு தம்மிடத் துண்டாகிய செருக்கினை நீங்கி மச்சவடிவத்தோடு காஞ்சியை அடைந்து சிவலிங்கந் தாபித்துச் சிவார்ச்சனைசெய்து சிவபெருமானுடைய சரித்திரத்தை இந்திரன் முதலாகிய தேவர்க

ளும் நாரதர் முதலாகிய முனிவர்களும் கேட் கும்படி பிரசங்கஞ் செய்துவரும் நாளில், சிவ பெருமான் அப்பணிக் கிரங்கி மச்சவடிவத் தோடு தம்மைப் பூசித்த விட்டுணு முன்னிலே யிற்றோன்றி வேண்டியவரங் கேளென்த் திரு வுளமிரங்க, மச்சவடிவாகிய விட்டுணு சிவபெ ருமானைத் துதித்துத் தேவனே நான் என்னு டைய வடிவத்தோடு வைகுந்தஞ் சோந்து திதி த்தொழிலை நடத்தவும், நான் வணங்கிய இவ் விலிங்கத்தை வணங்கினோர் சிவகதியை அடை யவும் திருவுள மிரங்கவேண்டுமென் றிரக்க, அவ்வரமளித்துச் சிவபெருமான் மறைந்தருளி னர். விட்டுணுவும் தனது வடிவெடுத்து வை குந்தமடைந்தார். அவ்விலிங்கம் மச்சலிங்கமெ ன்று பெயர்பெற்றது. அவர் சொன்ன புராண மும் மச்சபுராணமென்று பெயர்பெற்றது. மச்ச வடிவத்தோடு விட்டுணு பூசித்ததினால் காரணப் பெயரோடு மச்ச லிங்கமென்றும், மச்ச புராண மென்றும், அவ்விலிங்கமும் புராணமும காரண ணப்பெயர்பெற்றது. இந்தச்சிவலிங்கம் காஞ்சி யிலே கச்சீசுபரர் கோயிலுக்குள்ளே வடக்குக் கோபுர வாசலிலிருக்கும் இப்பிதீர்த்தத்தினுக்கு மேற்கே இருக்கின்றது. அவ்விலிஙகம மசச வடிவம்போ லிருக்கின்றது. இதனை அரும்போ

டக காணலாம். இச்சரித்திரம் பாகவதபுராண
த்திலும், காஞ்சிப் புராணத்திலும், உப
தேச காண்டத்திலும், மச்ச புராணத்தி
லும் அறிந்து கொள்ளலாம்.

## பாகவதபுராணம் மச்சப்படலம்.

நான்மறைப் பொருளி னுயர்ந்ததந் துவமுஞ் சாங்கிய
மடக்கு முதலாச், சுதைதரும் பொருளா விரவுபதேசந்
தமரற வருளிய பிரானந்தா, ரதமென நிகழ்த்து மச்
சபுராண முறைத்தய னிரவுபோய்மகிழ, வுதயமா முக
வந் திடவய மொழிய வுளாவுமீன் கரந்தன வம்மா.

## உபதேசகாண்டம் மச்சாவதாரப்படலம்.

மலர்த்துழாயணி யலங்கலோன் மீனமாய்த் திரையோட்
டலர்ங்கருங்கட லேழையு முடைபடுத் தியங்கி
யயாழுங்கு வாளெயிற் றிடங்களோ முதலின வொருங்கே
விழுங்க மன்பதைப் டரட்பெலாஞ் சுழல்வனவெருவி.

ஆருயிருடபுகு மினியென வுணாகிமேல மைய
மாருமண்டமு மதிர்ந்தன வருண்முறை டாரத்துச்
சாருமிச்செருக் கொழித்திலை யாமெனிற் றமியே
மேரும் வையமும் விளிந்தன வெனப்பணிந் துதைத்தார்.

அரவுலாந்தருக குழைப்புறத் தவருளை யடைந்துச்
சிரமொ னாந்துடை யெம்பிரான் றிருவரு ளிரங்கி

யுரவுசாத்தனை வருதியென் றுங்கவாச னுரைத்தான்
பரவருந்திறன் மீனவெஞ் செருக்கறப் படுட்ட.

அலைத்த வாரபுனற் சென்னியோ னங்கவை யருளக்
கொலைத் தலைக்கொடுஞ் சூற்படைச் சாத்தனை தேறுகி
வலைக்குலத்தவ ருருவுகொண் டம்பகளை வந்தா
னிலைத்த சிந்தையி னெக்கின னதறகெதிா நிமிர்ந்தான்

எடுத்துவீசிய வலைகட லேழையு நிரப்பிப்
படுத்திழுத்தலும் வலையகப் பட்டது பாரா
நடுக்கடற்புகுந் திருவிழி பறித்தனன் நடந்தான்
கடுத்த வெஞ்செருக் கிழந்தது மீனமாக் கடவுள்.

தன்னை நோக்கிடு செருக்கிறுந் தழுவிய டாவம்
பின்னமாவதற் கேதுசெய் குதுமெனப் பிடித்து
முன்னவற்கெனக் காஞ்சிபுக் கருச்சனை முயலா
மின்னிருஞ்சடை வேணியோற டணிந்தம் மீனம்

ஏறுயாத்தரு ளெம்பிரான் றிருவரு ளிரங்கிச்
சிறுமால்விடைக் காட்சிதந் தருளினன் றிருமான
பாறிலவன்டொடு டணிந்தடி வரன்முறை வழுத்தி
யீறிலெந்தைநீ யென்பிழை பொறுத்தியென் றிரட்ட.

நினக்கு வேண்டுவதென்னென முக்கணு னிகழ்த்து
மனக்கொ டுந்திறன் மயக்கறீத் தக்கயல்வடிவுந்
தனைக்குறித்தெனை வணங்கினே ரிருங்கதி தழுவப்
புனற்கொ டுஞ்சடை யெம்பிரானருளெனப் புகன்றான்.

காஞ்சிப்புராணம் மச்சப்படலம்.

பிருகுமாமுனிசபித்தபெற்றியா
லொருவருங்கயவுருவுதாங்குபு
மருமலர்ப்பொழிறயாஞ்சிலைப்பிடைப்
டொருவிலிப்பிரீடபுடையிலங்கொளிஞன்.

சலங்கொள்மீனுருத்தன்டையாசாட்டிடங்
இலிங்கமன்பினிருத்தியருச்சனை
தலமைகச்செய்தருள்பெற்றுத்தொகுதிக்
கலங்கலன்மல்குகடலகத்தெய்தினன்.

கச்சிமாநகாவைப்பிற்கருந்துழாய்
மச்சமாச்சித்தமச்சமலிங்கத்தினை
நச்சியேத்துநா தாம்பெறுநன்னல
மிச்சகத்தெவரிற்றென்றனட்டமோ.

## கூர்மவடிவத்தோடு விட்டுணு சிவார்ச்சனை செய்தது.

சுரர், அசுரர், திருப்பாற்கடலைக் கடைந்தமிர்தமெடுக்கும்போது கீழேவீழ்ந்த மந்தரமலையை விட்டுணுவானவர் அநேக கரங்களும், அநேக கால்களும், அநேகம் யோசனையுடைய மேன்முதுகுமாகிய உறப்பப் பொருந்திய ஆமை வடிவெடுத்து மந்தரத்தை நிறுத்திச் சமுத்திரத்தைக் கடைந்து தேவர்களுக் கமிர்தமீய்ந்த செருக்கினால் தன்னையும் மறந்து, சிவபெருமா

னையும மறந்து, சத்த சமுத்திரமும் ஒன்ருகிச் சேருகக்கலக்கித் திமிங்கிலம் முதலாகிய மீன் களையுண்டு பசி நீங்காததினுல் அச்சமுத்திரத் தின் கண்ணுள்ள நீரோடு சேறுகளையும் பூமி யோடு பொருந்தநக்கி, விண்ணுளோரும் மண் ணுளோரும், அச்சுறும்படி கலக்க, அசசமுத் திரங்களின் நீரானவை பூமியிலும் மலையிலும் பரந்து செல்லுதலால், சந்திர சூரியருதையஞ் செய்வதற் கஞ்சியே யிருந்தனர். உலகமெங் கும் இருள் பரம்பியது. தேவர்களும் பிரமனுங் கயிலாயத்திலே சென்று சிவபெருமானை வண ங்கி எங்களைக் காக்கவேண்டுமென் றிரக்க, சிவ பெருமான் றிருவுளக்குறிப்பை அறிந்த விநா யகப்பெருமான் சத்தசமுத்திரத்தின் கரையை அடைந்து, அச் சத்தசமுத்திரத்தின் கணணு ள்ள நீர்க ளெல்லாவற்றையுந் தமது தும்பிக் கையிஞ லுறிஞ்ச, அந்நீர்களோடு ஆமை வடிவ மாக விருந்த விட்டுணுவும் அத் தும்பிக்கைக் குள்ளே வந்த செய்தியை அறிந்த விநாயகப் பெருமான் அந்நீர்களோடு விட்டுணுவாகிய ஆ மையையுந் தரையிலேயூத, நீர்களானவை சத்த சமுத்திரங்களிலே சென்றன. விட்டுணுவாகிய ஆமை தரையிலே கிடந்தது. அதனைக்கண்ட விநாயகப்பெருமான் தமது திருக்கரத்திலே

யிருந்த ஒற்றைக் கொம்பினால் விட்டுணுவாகிய ஆமையினைக் குடைந்து, ஓட்டைப் பிடுங்கிச் சிவபெருமான் திருமுன்னே வைத்தருளினர். அதனைக்கண்ட பிரமனும் இந்திராதி தேவர்களுஞ் சிவபெருமானைத் துதித்துத் தேவரீருடைய திருமேனியிலே இத் திருவோட்டைத் தரித்தால் தேவரீரைத் தரிசிக்கவந்த விட்டுணுவானவர் தமமிடத் துண்டாகிய அகந்தையை நீங்குவாரென்று பிரார்த்திக்க, சிவபெருமானதற்கிசைந்து அவ்வோட்டைத் தமது திருமேனியிலே தரித்துக் கொண்டார். அதன்பின்பு, ஆமைவடிவம் பொருந்திய விட்டுணுவானவர் அகந்தையை நீங்கித் தன்னைப் பரமெனவே பாவித்த பாவமானது நீங்கும்பொருட்டுக் காஞ்சியிலே ஆமை வடிவத்தோடு சென்று சோதிரூபமாகிய சிவலிங்கப்பெருமானை அருச்சனை செய்து, இந்திரன் முதலாகிய தேவர்களும், நாரதா முதலாகிய இருடிகளும் அறியும்பொருட்டுச் சிவபுராணத்தைப் பிரசங்கமுஞ் செய்தனர். சிவபெருமானித் திருப்பணிக்கிரங்கி ஆமைவடித்தோடிருந்த விட்டுணுமுன் றோன்றி வேண்டியதென்னை அதனைக் கேளென விளம்ப, சிவபெருமான திருவுள மிரங்கியதை அறிந்த ஆமைவடிவாகிய விட்டுணு அநேகந் துதிகள்

சொல்லித் தேவனே இவ்வாமை வடிவத்தோடு நான் அடைந்த செருக்கினால்வந்த பாவமானது நீங்கவும், ஆமைவடிவத்தோடு நான் பூசித்த இச்சிவலிங்கமானது கச்சபேச இலிங்கமென்று பெயரோடு விளங்கவும், தேவரீரிடத்துண்டாகிய பத்தியானது நம்மைவிட்டு நீங்காதிருக்கவும் அருள் புரியவேண்டுமென் றிரக்க, சிவபெருமா னிவ்வரமளித்து மறைந்தனர். காஞ்சியிலே ஏகாம்பரர் சந்நிதானத்தினுக்குத் தெற்கே கச்சபேசர் சந்நிதான மிருக்கின்றது. யாவரும் போய் அச்சிவலிங்கப்பெருமானை வணங்கி யுய்ந்திருக்கலாம். கூர்ம வடிவத்தோடு விட்டுணு சொன்ன சிவபுராணமுங் காரணப்பெயரோடு கூர்மபுராணமென்று பெயர் பெற்றது. கூர்மத்தினுக்குக் கச்சபமெனவும், ஆமையெனவும் பெயருள்ளது. அதுபற்றிக் கச்சபேசரெனவே பெயர் பெற்றது.

உபதேசகாண்டம் கூர்மாவதாரப்படலம்.

மாயனாமைவடிவுகொண்டானவ
னாயவேலையகடுகிடந்தனன்
தீயசெய்வனசெப்பவற்றோவினி
நீயவன்செயனீத்துறவேண்டுமால்.

காக்குநாரணன்காத்துழிக்காத்தவை
போக்கவீதுபுரிகுவனீயது

நீக்குகின்றவனீலகண்டன்றுயி
ராக்கியோய்நின்னடைக்கலமையனே.

ஏதெடுத்திரந்தேந்தினானவா
மாதடுத்தமருங்குடைவானவன்
போதடுத்தபுகழுகட்பிள்ளையை
நீதடுத்திகொலென்றுநிகழ்த்தினான்.

சென்றுநோக்கித்திரைபொருவேலைநீ
ரொன்றுகூட்கைநெடுங்கரத்துட்புக
நின்றுறிஞ்சவசீரொடியாமைவெங்
குன்றுமந்தக்கொடுங்கரம்புக்கதால்.

கோடுகுத்திக்கமடங்குடைந்தத
னோடுதந்தைகழியுறையுய்த்தனன்
பாடுநிற்றமலரயனேமுத
லீடுதேவர்தொழுதனரசித்தனே.

அச்சுதப்பெயரன்னவருந்தவங்
கச்சிபுக்கிருந்தாறறிஞங்கண்ணுத
லர்ச்சனைக்குரித்தாகியகந்தைடோய்ட்
பச்சைமேனிபவித்திரமெய்தினன்.

காஞ்சிப்புராணம் கச்சபேசப்படலம்.

முன்னொருபிரமகற்பத்திடைநாரணன்மூரிநீ
ரண்ணுமந்தரமலையாமையாய்த்தாங்கிவாரகடல்கடைந்
தின்னமுதஞ்சுரர்க்கீய்ந்தவெஞ்செருக்கெய்தியாங்
கன்னமூழ்நீரமுழுதுமழக்கினுழலமெலாமஞ்சவே.

அச்சநீத்துாருயிருய்வகையருள்சுரந்தாங்குறீஇக்
கச்சபத்தின்னுயிரசெற்றதனோட்டினைக்கதுமெனா
நச்சியவெண்டலைமாலிகைநடுவுறக்கொண்டனன்
பச்சிளங்கிள்ளைபால்வீற்றிருந்தருளியபண்ணவன்.

இப்பெரும்பிழைதவிரந்துய்யுமாரணனெம்பிரான்
வைட்பெனுங்காஞ்சியிற்சோதிலிங்கத்தினைவழிபடூஉ
மெய்படுமன்பினுலிரந்திரந்தேத்தலும்விடைமிசைத்
துப்புறழ்செஞ்சடைத்தோன்றலங்கவனெதிரதோனறினு

மழுவலானிணையடிப்பொதுவறுபத்தியுமால்பதத்
தழிவிலாவிறைமையுமவ்விலிங்கந்தனக்கன்றுதொட்
டொழிவருங்கச்சபேசத்திருநாமமுமும்பரார
தொழுதெழுவாங்கர்னுமையொடுமினிதமாதோற்றமும.

கூர்மபுராணம் வருணச்சிரம தன்மமுறைத்த
வத்தியாயம்.

பொன்னகர்க்கிறைவனுதியமரரும்புலன்களைந்தும்
தன்னுழையடக்கும்வீணமுனிவனுந்தாழ்ந்துகேட்ப
மின்னகுநேமிசங்கும்வெங்கதைசிலைவாளேந்தி
மன்னியகூர்மரூபமான்முகமலரந்துசொல்வான்.

## வராகாவதாரத்தோடு விட்டுணு சிவார்ச்சனை செய்தது.

யொற்கண்ணனுகிய அவுணன் பூமியைப் பா யாகச் சுருட்டி வயிற்றுக்குள்ளே வைத்துக் கொண்டு பூமியின் கீழுள்ள பிலத்துவாரத்துக்

குள்ளே மறைந் திருந்தபோது, நாராயணன் வராகவடிவாகி அவ் வசுரனைக் கொலைசெய்து பூமியை முன்போலவே வைத்து அகங்காரங் கொண்டு மூவுலகத்திலுள்ள சீவர்களு அச்சமுறும்படியாகவே கோபித்தார். பிரமனும் இந்திரன் முதலாகிய தேவர்களுங் கயிலாயத்தி லேசென்று சிவபெருமானைத் துதிக்கச் சிவபெ ருமான் அத்துதியைத் திருச்செவியி லேற்றுச் சண்முகப்பெருமானை நோக்க, சண்முகப்பெரு மான் சிவபெருமானுடைய திருவுள்ளக் குறிப் பை அறிந்து பன்றிவடிவாக விருந்த நாராயண ன் பக்கலிலே சென்றார். சண்முகப்பெருமானை க் கண்டு பன்றிவடிவாகிய நாராயணன் அதிக கோபங்கொண்டு வந்தபோது சண்முகப் பெரு மான் தனது திருக்கரத்தி லிருந்த வேலாயுதத் தினாலே நெற்றியிற் குத்தி நிலத்தோட முக்கிப் பிறையையொத்த கோட்டைப் பிடுங்கிச் சிவ பெருமான் திருமுன்னிலையில் வைத்தார். அத னைக்கண்ட பிரமனும், தேவர்களுஞ், சிவபெரு மானை வணங்கித் தேவனே நாராயணன் பின் னொருகாலஞ் செருக்கடையாவண்ணம் தேவரீ ருடைய திருமேனியிலே இக்கோட்டைத் தரித் தருளவேண்டுமென் றிரப்பச், சிவபெருமா ன ப்படியே செய்தருளினார். நாராயணன் செருக்

கினை நீங்கிக் காஞ்சியிலே சென்று பன்றி வடிவத்தோடு சிவலிங்கந் தாபித்துச் சிவார்ச்சனை செய்து, இந்திரன் முதலாகிய தேவர்களும் நாரதர் முதலாகிய இருடிகளும் அறியும்பொருட்டுச் சிவபுராணம் பிரசங்கஞ் செய்தார். சிவபெருமான் அத்திருப்பணிக்கிரங்கிப் பன்றிவடிவாகிய நாராயணன்முன் ஞேன்றி வேண்டியதென்னை கேளெனத் திருவுளமிரங்கப், பன்றி வடிவாகிய நாராயணன் அதிக துதிசெய்து தேவரீரை நான் நினைத்துப் பூசித்த இச் சிவலிங்கமானது வராகீச்சரமென்று பெயர்பெற்றிருக்கவும், இச்சிவலிங்கத்தை வணங்கினோர் சிவலோக மடையவுந் திருவுள மிரங்கவேண்டுமென்றிரக்க, அவ்வரமளித்துச் சிவபெருமான் மறைந்தருளினர். நாராயணர் றனது சுயவடிவத்தோடு கெருடன்மீதேறி வைகுந்தமடைந்தார். விட்டுணு வராகவடிவத்தோடு பூசித்த சிவலிங்கம் காஞ்சியிலே வராகீச்சுரரென்று பெயர் பெற்றிருக்கின்றது. விட்டுணு சொன்ன சிவபுராணமும், வராகபுராணமென்று பெயர் பெற்றிருக்கின்றது. விட்டுணு வராகவடிவத்தோடு பூசித்த சிவலிங்கமுஞ் சிவபுராணமுங் காரணப்பெயரோடு வராகீச்சுரரென்றும், வராகபுராணமென்றும் பெயர் பெற்றிருக்கின்றன.

இச் சிவலிங்கததைக் காஞ்சியிலே சென்று யாவரும் தெரிசிக்கலாம்.

பாகவதபுராணம் வராகப்படலம்.

கோலமணிட த்துடையிருத்துங்கோமள
ஞாமமின்னினையழைத்துவந்துநானமறை
வேலையிற்றிரண்டிடும்பிரதமீண்டிய
சிலமாவராகமாபுராணஞ்செப்பினன்.

உபதேசகாண்டம் வராகவதாரசரு

பரந்தபாற்கடற்பாம்பணைப்பள்ளியான்
முரண்டருந்திறற்பன்றியின்மூதுருக்
கரந்துவையகம்யாவுங்கலக்கலா
லரந்தைபெறறுவெருக்கொண்டார்ருயிா

இன்னுமாத்திரைதாழ்க்துறினெனமுடைய
பொன்னிஞடும்புகுந்துகலக்குமா
னின்னையன்றிநெடுந்துயரொய்திஞ
லின்னறீர்த்தெமைக்காட்பவாயாவரோ.

ஆடக்கணரக்கனையஞ்சியெங்
கேடுதீர்த்தியெனப்புகல்கேண்மையாற்
கோடுவெண்கதிாக்கூன்பிறைக்கண்ணியோய்
பாடெமக்குப்பலித்ததெம்பாவமே.

எனனபபன்முறைசொற்றிரந்தேத்திஞா
வன்னிச்செங்கைமமப்படைவானவன்

அன்னாக்காரருணோக்கியளித்தனன்
பின்னாச்சண்முகட்பிள்ளையைநோக்கினான்.

ஊர்திரைக்கடலேழுமுழக்கியே
போதிரைத்தன்பெரும்புறப்பள்ளுவாய
நீருழக்கிநிமிர்ந்தெழுமேல்வையிக்
கார்மயிற்பரிச்சேவகன்கண்டனன்.

கண்டசேவகற்கண்டதுகாய்சினங்
கொண்டுவெண்பலலகடிக்கொண்டதாற்
றிண்டிறற்பிடர்க்கூந்தல்சிலிர்த்தழன்
மண்டுமாமுகங்கீழ்ப்படவந்ததால்.

வெற்றிவேற்படைவாணனைவணங்கிவை
முற்றுநோக்கிமுனைகைபூத்தனன்
கொற்றவேற்படைகொண்டதன்றிண்டிற
னெற்றிகுத்திவிலத்தொடமுக்கினான்.

ஆடல்வேல்கொண்டமுக்கலுஞ்சோரிநீர்
பாடகன்றதுபாதலஞ்சென்றதா
லாடுபுக்கிழிந்தன்னதனொண்பிறைக்
கோடுபற்றிப்பிடுங்கினன்கோதிலான்.

மாயமாயவராகவுருக்கழிந்
தாயமாயனரனையருச்சியாத்
தீயவாணிவச்செய்கைச்செருக்கறப்
போயொழிந்துதனதுழைப்போயினான்.

காஞ்சிப்புராணம் நாரசிங்கேசப்படலம்.

வாரகீச்சரமன்னதன்றெற்கதுமன்னுபொற்
பேரரன்றன்னெடுதோன்றியபொன்விழிப்பேரிளுற்
பாரத்தான்வெள்ளவினன்பாதலத்தேகலும்பைந்துழாய்த்
தாரன்சூகரமாயவனறனன்னச்சவட்டியே.

முன்போற்பாரைக்கொணர்ந்துநிறீஇமதமூண்டுழிக்
கொன்பாயுேறவன்வேடுருக்கொண்டியிருண்டொரு
வன்பாரகோடுபிடுங்கியணிந்தபின்மற்றவ
னன்பாலீசனேயர்ச்சனைசெய்தருள்பெற்றதே.

## விட்டுணு நாரசிங்காவதாரத்தோடு சிவார்ச்சனை செய்தது.

இரணியனென்னு மோரசுரன் தனது நாம மாகிய "இரணியாயநம" வென்ற சத்தமே அன்றி, வேறொருத்தர் நாமத்தையுங் கூறாதவகை ஆணைசெய்து, தன்னையே பரமென மதித்து, அரசு செய்துவருநாளி லொருநாள் விட்டுணு நாரசிங்க அவதாரமெடுத்து, இரணியனைக் கொலைசெய்து, அவனிரத்தத்தையுண்டு மூவுலகின் கண்ணுள்ளாரும் அஞ்சும்படிக்கு அதிக கோபங்கொண்டு ஆரவாரிக்கும்போது பிரமனும், இந்திரன் முதலாகிய தேவர்களும், நாரதர் முதலாகிய இருடிகளும், ஒருங்குகூடி விட்டுணுவினுடைய புகழ்களெல்லாவற்றையுஞ் சொல்லித் து

தித்தார்கள். அத்துதிக்கிரங்கித் தானடைந்திரு ந்த செருக்கினாலே சிறிதுந்தணிந்திலன். பின் பு அவ்விட்டுணுவினுடைய மார்பகத்துறையுந் திருவை நோக்கித் துதித்தார்கள். அத்திருவும் அவர்கள் துதிக்கிரங்கி அதிகமாகவே ஆடை ஆபரணங்களையும் சுகந்த திரவியங்களையும் அணிந்துவந்து விட்டுணுவைக் கண்டஞ்சித் தன்னுடைய கைகளால் தனது கண்களை மூடிக் கொண்டு இவ்வுருவைக் கண்ட கண்களானது ஒளியிழந்துபோமென்றஞ்சி அவ்விடம்விட்டு நீங்கினாள். அதன்பின்பு, பிரமனும் இந்திரன் முதலாகிய தேவர்களுங் கயிலாயத்திலே சென் று சிவபெருமானை வணங்கித் துதிக்கும்போது, சிவபெருமானத்துதிக்கிரங்கி, வீரபத்திரக்கட வுளை அழைத்து, விட்டுணு நாரசிங்க வடிவத் தோடடைந்திருந்த செருக்கினை அடக்குவாயெ ன்று கட்டளையிட, வீரபத்திரக் கடவுள் அப் பணி சிரமேற்கொண்டு, சரபப்பட்சி வடிவ த்தைப் பொருந்தித் தனது இரண்டு சிறகின்க ண்ணே மூவுலகமும் அடங்கும்படியான பெ ரியவடிவத்தோடு சென்று, நாரசிங்க வடிவாக வே நின்ற விட்டுணுவைத் தனது இரண்டு சிற குகளினாலே அமுக்கித் தனது செண்டினால் மேற்றோலை யுரித்துச் சிவபெருமான் றிருமுன்

ஷாலையில் வைத்தார். அதனைக்கண்ட பிரமனும் இந்திரன முதலாகிய தேவர்களுஞ் சிவபெருமானைத் துதித்து அடியேங்க ளுய்யும்பொருட்டு இத்தோலை யுடையாகத் தரித்தருள வேண்டுமென்றிரந்தார்கள். சிவபெருமானத்துதிக் கிரங்கி அத்தோலை யுடையாகத் தரித்தருளினர். அதன் பின்பு, நாரசிங்கவடிவாகிய விட்டுணு தன்னிடத்துண்டாகிய செருக்கினை நீங்கிக் காஞ்சியிலே சென்று சிவலிங்கந் தாபித்துச் சிவார்ச்சனைசெய்து சிவபுராணமும் பிரசங்கஞ் செய்தார். விட்டுணு நாரசிங்க வடிவத்தோடு பூசித்த அவ்விலிங்கத்தின்கண் நின்று சிவபெருமான் தோன்றி வேண்டிய வரங்களும் விட்டுணுவுக்கருளி அவ்விலிங்கம் நாரசிங்கேசமெனவே விளங்கும்படி செயது மறைந்தருளினர். விட்டுணுவும் தனது உருவத்தைப்பெற்றுக் கருடன் மீதேறி வைகுந்தமடைந்தார். விட்டுணு பூசித்த நாரசிங்க இலிங்கங் காஞ்சியிலே இருக்கின்றது. எவர்களும் அவ்விலிங்கத்தைத் தெரிசித்து வேண்டிய வரங்களைப் பெற்றுக்கொள்ளலாம். விட்டுணுசொன்ன சிவபுராணமும் நாரசிங்கபுராணமெனவே பெயர் பெற்றிருக்கின்றது. இது சிவபுராணங்கள் பத்தில் ஒன்றாயுள்ளது.

## உபதேசகாண்டம் நாரசிங்கவதாரப்படலம்

பொன்னிறத்தவாளசுரனையாருயிர்போக்கப்
பின்றூவெண்டிரைப்பாற்கடற்றுயின்றருள்பெருமான்
மன்னுவெஞ்சினமானிடமடங்கலாய்த்தோன்றி
யன்னவற்செகுத்தடங்கலன்சீற்றமிக்கயாந்தான்

எனவிரத்தலுமெம்பிரான்றிருவருளிரங்கி
வினையடுந்திறல்வீரபத்திரப்பெரும்பெயரோன்.
றனையழைத்தெரிதழல்விழிமானிடமடங்கற்
சினவுவெஞ்செருவொழித்தியென்றிசைத்தலுஞ்செல்வ

சரபப்பேருருவெடுத்தனனளவொழிதடக்கை
விரவித்திண்சிறைவெள்ளிடைபுதைத்துறமீப்பாய்ந்
துரவுத்தின்பதமெட்டினுங்கிளைத்துவெள்ளுகிராற்
கிரணப்பொற்கிரியெடுப்பினுங்கிழங்கெனக்கிழியும்.

டோரத்தவெஞ்சிறைக்கலுழனப்பொறிப்பெடையளகின்
பாரப்படுத்தெனப்பாய்ந்ததுபடுபிடரமுக்கிக்.
கூரத்தவள்ளுகிரொப்புறப்புதைத்ததுகுருதி
யீரத்தெடுத்ததுபெருந்திரையிருங்கடன்மடுப்ப.

கறித்துமிழ்ந்ததுகரங்களைக்கதிர்முடிச்சிரத்தைக்
கொறித்துமிழ்ந்ததுகுருதிகொப்புளித்த [illegible]
முறித்தமுக்கியதிடிக்குரலெழுப்பியமுழக்கிற்
செறித்தபுன்செருக்கிழந்துயிரிழந்ததச்சீயம்.

ஆரந்தைநீத்தனமெனத்தொழுதாங்கவரகன்றார்
பரந்தபாற்கடற்பள்ளியோனட்டவந்தொலைட்டான்
கரந்தைசூடிதாளருச்சனைபுரிந்தவைகளியப்
புரந்தபூமகளையகன்றன்னுழைப்புகுந்தான்.

காஞ்சிப்புராணம் நாரசிங்கீசப்படலம்.

நரமடங்கலினாரணனுந்திருக்காஞ்சியை
விரவிநாரசிங்கீச்சுரவேந்தைசிறீஇயினான்
பரவியேத்தினன்வெவ்வினைநீத்தருள்பற்றினா
னூரவிநீருடையத்தலமுத்தமமாகுமால்.

பாகவதபுராணம் நாரசிங்கப்படலம்.

ஈதெலாமியம்பிவேதனயாவொடுமிறைஞ்சவுந்தான்
ஆதிதனமுனிவையோவாதிகமாயெழுதலோடும்
பீடிகொண்டணைந்துநின்றபிதாமகன்கமலத்தெய்து
மாதையிவ்விடனோக்கவருதியென்றேத்தும்வேலை.

சுடருறுகலன்களெல்லாந்துலங்கிடநிகரிலாத
வடிவுடைவனசட்டாளைவானவர்துதிப்பவெய்தி
முடியுயரண்டகோளங்கிழிந்திடமுனிந்துநின்ற
கடவுளைக்கண்டுகையால்வெருவிக்கண்மூடினாளே.

மருவியேயொருவாதென்றுமார்பிடைவயங்கத்தோன்றும்
திருநரமடங்கலோங்கிமுனிந்திடுஞ்செயலைநோக்கி
வெருவியவ்வுருவைநோக்காவிழியெனவிளம்பிபேக
விரணியன்சிறுவன்றன்னையாவருமெமைக்காவென்றார்.

## விட்டுணு வாமனரூபத்தோடு சிவார்ச்சனை செய்தது.

காசிபமுனிவரின் மனையாளாகிய அதிதிவயி ற்றிலே விட்டுணு வாமனன் என்கின்ற பெய ரோடு தோன்றி மாவெலிபக்கலிற் சென்று மூ வடிமண் கேட்டுப்பெற்று ஓரடியால் பூவுல கை அடக்கித் தனதெனப்பண்ணி மற்ற ஓரடி யால் மாவெலியை மிதித்துப் பூமியின்கீழே சி றைவைத்து அண்டங்க ளிடிந்துபோகவும் திக் குகளுடைந்து பேரவும் மூவுலகும் தன்னுருவி லே தோன்றவும் நீண்ட கோலத்தோடு நின்று அதிக அகங்காரங் கொண்டார். இதனைக்கண்ட பிரமனும் இந்திரன்முதற் றேவரும் கயிலாயத் திலே சென்று சிவபெருமானைத் துதிக்கும்போ து சிவபெருமான் றிருவருள்சுரந்து, வயிரவக் கடவுளை நோக்க, அவ்வயிரவக்கடவுள் சிவபெ ருமானுடைய திருவுள்ளக் குறிப்பை யோர்ந்து, நீண்டகோலத்தோடு நின்ற விட்டுணு பக்கலி லேசென்று விட்டுணுவை நோக்கி நீகொண்ட இக்கோலத்தையும் செருக்கையும் நீங்கி, உன து சுயவடிவத்தோடு வைகுந்தமடையக் கடவா யென்று கூற அதனைக்கேட்ட விட்டுணு இவை களைச் சிறிதேனுஞ் சிந்தித்திலன். வயிரவக்கட வு ளதிககோபங்கொண்டு அடாது செய்தவர்

புடைபுன படுவனொன்று பெரிய தண்டினால் அ ண்டங்க ளிடிந்துபோம்படிவீசி அடித்தார். நீ ண்டகோலத்தோடுநின்ற விட்டுணு சண்டவா யுவின் வேகத்தினு லடிபட்டுக் கீழேவீழ்ந்த மேருமலை போலவே வீழ்ந்து தம்மிடத்துண் டாகிய செருக்கினை யிழந்தார். கரியமலை யெனவே கீழே வீழ்ந்த வாமனனாகிய விட்டு ணுவின் மேற்றோலை யுரித்து ஆடையாகவே சுற்றிக்கொண்டு, முதுகின் என்பைப் பிடுங்கித் தண்டெனவே பிடித்துச் சென்றார். அதன் பின்பு வாமனனாகிய விட்டுணு தம்மிடத் துண் டாகிய செருக்கினை நீங்கி வாமனவடிவத்தோடு சிவலிங்கந் தாபித்துச் சிவார்ச்சனை செய்து சிவ புராணத்தைத் தேவர்கள் முனிவர்கள் கேட்கப் பிரசங்கமுஞ் செய்து சிவபெருமானுடைய திரு வருள் பெற்றுத் தமது சுய வடிவெடுத்து கரு டன்மீதேறி வைகுந்தஞ் சேர்ந்தார். வாமனரூப த்தோடு விட்டுணுசொன்ன சிவபுராணம் வாம ன புராணமென்றே காரணப்பெயரோடு விளங் குகின்றது.

கூர்மபுராணம் மாவெலி

மூவடிமண்ணளித்த வத்தியாயம்.

சால்புறுதன்னகாசாரந்தபின்றவங்

கோலியகாசிபனருளின்கொள்கையால்

மாணினைத்தரித்தலின்மடந்தையவ்வயி
ருலிலையென்பதற்கையமில்லையே.

தாமரைக்கண்ணினன்சடிலன்றன்டினென்
வாமனவுருவினன்வந்துதோன்றிய
பூமகள்கொழுநனைப்புகழ்ந்துதானவா
கோமகன்வந்ததென்கூறுவாயென்றான்.

உபதேசகாண்டம் வாமனாவதாரச்சருக்கம

நெடுமுடிக்கொடிஞ்சிமான்றேர்நீணிதிநிறைந்தகுப்பை
படுமணிக்கலன்களம்பொற்பசுந்துகிற்றூனைதானை
விடுபரிமுதலயாவும்வேண்டலம்வேண்டினமெய்ம்
மடிதொடுமளவைமூன்றுநின்னிலத்தளித்தியென்றான்.

மூவடிமண்ணினையசெய்வதென்மொழிதியென்னத்
தேவயாதவத்துச்சிந்தைசெய்தவணிருந்துசெய்வே
மாவதுபுரிதியென்றுவைநடந்தனனமலனன்றே
னீவதுமுயன்றான்வெள்ளியருகுசின்றினையசொல்வான்.

முருகவிழ்மலரோடளரிமூக்கைநீர்முகந்துவிட்டா
னருண்முறையங்கையேந்திநிலத்திடைக்கவிழ்த்தானைய
திருகுவாளெயிற்றுவேந்தனுதவியநிலத்தெண்ணீர [ன்
தருநிழலவற்குமுன்னையமிழ்திறுந்தக்கதன்றே.

சேண்படந்வந்ததெந்தைதிருமுடிச்சிகரந்தீண்டி
மாண்படுதிசைகளெல்லாமறைத்தனபுயங்கண்மண்மேற்

காண்படுதிகந்தமுற்றுங்கரந்தனவுருவங்கூர்ந்து
சாலப்பணிவெல்லாந்தானேயென்பனகாட்டாநின்றான்.

ர்த்திருநிலத்தையோர்தாளடக்கியதெவையுந்தாங்கித்
தாய்ந்தெழுவடபான்மேருச்சுற்றுவிட்டெழுந்துமீட்போ
ந்தளினிவாந்ததோர்தாளோர்பதந்தளவைகாணான் [ம்
பந்தனன்மகுடச்சென்னிமாவலிதருவாகோமான்.

ற்றடியிறைஞ்சிவாழ்த்துமிந்திரன்முதலோர்க்கின்னே
நற்றணிக்கருணைகூர்தான்றருநிழலரசுதந்தா
னின்றவோரடியுநேராமாவலிநெடும்பொற்சென்னிக்
கன்றணிந்தமைத்தானல்லன்சீறினனமலநாதன்.

மொயிற்றசுராகோமான்மாவலியென்போன்றன்னைக்
ரகட்படுத்திமற்றைக்கடிகமழலங்கற்குல்லைத்
ரசப்படுத்தமாயோன்றன்னிகரின்மைநோக்கிட்
ரகலண்டமெல்லாமபிளப்பதற்குருத்துநின்றான்.

யன்னதுதடுத்தியாயினமரருமுனிவராயாரு
நின்னடிதொண்டுநீங்காநெறிநிற்றநிலையினிற்
சென்னலுமியம்பவெற்பீன்றளித்திடவுலகமீன்ற
கன்னியோர்பாகனேவவயிரவக்கடவுள்சென்றான்.

சென்றனனெதிரர்நின்றோரானைவச்செருக்கினிற்கு
மன்றலர்துளவினுற்குமாமயக்கொழியநேரா
வின்றியல்பிறவுஞ்சொன்றனஃதவன்சிறிதுமென்றான்
கன்றியவெகுளிமிக்கான்வைரவக்கடவுட்செல்வன்.

பற்றினன்வயிரத்தண்டம்பகிரண்டமதிரவோச்சிச்
சுற்றினன்னுருமுக்காலத்தெழித்தனன்றுளவமார்பி
னெறறினனெற்றலோடுமெறிபடுசெண்டவாயு
முற்றுரவிற்றுயீழுமூரிவெங்கிரியிற்சாய்ந்தான்.

கருநிறக்கமஞ்சூன்மேகக்காரதனூரித்துவாங்கித
திருநிறந்தமையக்காளகஞ்சுகமென்னச்சோத்தி [ன்
வெரிநுறட்பிடிங்குமென்புதன்மெனவிடுத்துக்கொண்டா
மருமலாநதுளவமாயோனுணவமயக்கந்தீாந்தான்.

வரன்முறையுணாந்தமாயோனுணவமயக்கால்வந்த
புனைதவட்பவள வேணிட்புண்ணியப்பொருட்பையோரா
விரைநறுமலரிட்டேத்தியருச்சனைவிழையாநின்றுன்
கனையழிசெருக்குநீத்தான்பெற்றனன்கடவுட்டன்மை.

## விட்டுணு பரசிராமனுக அவதாரமெடுத்துச் சிவார்ச்சனை செய்தது.

எக்காலமும் ஒருமித்த மனத்தோடு சிவயோகத்திருப்பவரும், சிவத்தின்மேற் பற்றிய அறிவானது ஒருகாலத்தும் நீங்கப் பெறுதவரும், தவமே யுருவமாகித் தவஞ்செய்ததே போன்றவரும், காமாதி பற்றுக்களை விட்டவரும், தெய்வத்தன்மையிலே சிறந்தவரும், சமதக்கினி முனிவரென்னுந் திருநாமத்தை யுடையவரும், ஆகிய இம்முனிவரின் மனையாளும், அம்முனிவருக்கு ஆவிபோன்றவளும், தனது நாயகனைப்

போலவே தவநிலை தவறாதவளும், கற்பிலே அருந்ததியை ஒத்தவளும், தனது நாயகன் செய்யுஞ் சிவபூசைக்குத் தீர்த்தமானதைப் பாத்திரங்கொண்டெடாமற் கையினாலே திரட்டிக் கொடுத்து வருகின்றவளும் நாயகனுடைய எண்ணத்துக்கு மாறுபாடில்லாமல் ஏவல் செய்து வருகின்றவளும், பதிவிரதத்தையே தவமெனச் சிந்தைசெய்து வருபவளும், ஆகிய இரேணுகையென்பாள் வயிற்றிலே விஷ்ணு பரசிராமனென்கின்ற பெயரோ டவதாரஞ் செய்தார். அப் பரசிராமனென்பவர் தினந்தோறும் மாதங்கடோறும் வருடங்கடோறுஞ் செய்து வருவதாகிய சாதககருமம் நாமகருமம் வித்தியாகருமம் உபநயனம் முதலாகிய கருமங்களைப் பிதாவாகிய சமதக்கினி முனிவராலே செய்யப்பெற்றும், எழுதி ஓதியுணரக்கூடாத இருக்குவென்னும் வேதக்கடலையும், அவ்வேதமாகிய கடலின்மீ தோங்கும் ஆகமங்களாகிய திரையையும் ஒருங்கே கற்று அவைகளின் கரைகளைக்கண்டு முழுதும் உணர்ந்த அளவையின் நின்றார். பின்னும் பிதாவினது சொல்லாகிய வரம்பைக் கடவாது நின்றார் இப்பரசிராம ரிவ்வகையே ஒழுகுகாலில் ஒருநாள் சிறிது கற்புநெறி வழுவக்கண்ட தனது மாதாவைப் பிதாவுரைப்படி சிரசறுத்

தும், தனது பிதாவாகிய சமதக்கினிமுனிவர் தனது மாதாவின்மேற்கொண்ட கோபமானது நீங்கவும், ஆவிநீங்கிய தனது மாதாவாகிய இரேணுகை ஆவிபெற்றுய்யவும், சிவபெருமானுடைய இரண்டு திருப்பாதத்திலே பற்றுவைத்துத்தன்னுடைய மனமானது உருகிநிற்கவும் வரந்தரவேண்டுமென்று தமது பிதாவாகிய சமதக்கினிமுனிவரை வணங்கி, அவரிடத்திலே இம்மூன்று வரங்களைப் பெற்றும், தமது பிதவாகிய சமதக்கினிமுனிவரின் சிரசைக் கொய்வித்த கார்த்தவீரியனையும், அவன் குலத்தரசரையுந், சிவபெருமானிடத்திலே பெற்ற வரத்தினாலும், மழுவினாலுங் கொலைசெய்தும், அதன் பின்பு மகேந்திரமலையிலே சென்று, சிவபெருமானை மறவாத சிந்தையோடு சிவார்ச்சனைசெய்து இன்றும் இறவாமல் சிரஞ்சீவியாகவே யிருக்கின்றார்.

உபதேசகாண்டம்

பரசுராம் அவதாரச்சருக்கம்.

ஒருவரம்வெகுளிநீவிட் டொழித்தியென் றுரைத்தான்
மற்றைத், தருவரமென்னையீன்ற ளுய்ந்திடத்தருதியென்றான், இருவரமொழியமற்றென் றீசன திருதாட்போதில், உருகுமன்பெனக்குவேண்டுந் தருதியென் றுரைத்துநின்றான்

வரன்முறையுணாத்துநின்றமகன்முகநோக்கிமற்றிற
விரதமாதவனுந்தானுய்ந்தனள்வினைமென்கூந்தல்
முரணுடைவெகுளிநீத்தான்முனிவனுமுனிவனீன்ற
பரசுடைப்புதல்வன்சிந்தைமுக்கணன்பதத்துள்வைத்தா

அற்றைநாணமுதலாவெற்றியடுதிறற்பரசுராமன்
கற்றைவார்சடையோற்கன்புகனிந்தனனாகிச்சென்றான்
றெற்றுதின்னிலையகானத்தருச்சனைதிருத்திச்செய்து
நற்றவம்பயின்றான்சென்றுநடந்தனசிறிதுகாலம்.

பன்னருந்தவத்தினின்றுன்சேவடிப்பதுமம்போற்று
மென்னுடைத்தாதைவைகுமிருக்கையினிரவுபாராச்
சென்னிவீழ்த்தெடுத்துச்சென்றா கார்த்தவீரியன்றன்மை
ரன்னவர்தாதையாவிவாங்குதற்காசைபூண்டேன். [ம்ப

லீந்தையேயருளவேண்டுமென்னலுமிமையாமுக்கட்
சந்திரமவுலியண்ணலஃதொன்றேதருதுமென்னாச்
சிந்தையினினைந்தயாவுஞ்செய்தனசிறக்கற்பாலை
தந்தனங்கோடியென்னாத்திருக்கரமழுவுந்தந்தான்.

தென்றிசையடையவெய்திமகேந்திரப்பொருப்புச்சேர்ந்து
கொன்றையஞ்சடிலத்தெந்தைகுளாகழன்மறவானாகி
யினறளவிந்தவானன்பினருச்சனையியற்றிநின்றான் நட்புக்
பொன்றிணிசடையீசன்றன்மையார் ... ருல் சுக்ரீபனை
அம்பினுலே ஏழு

## விட்டுனு இராமவதாரத்தோடு சிவார்ச்சனைசெய்தது.

சூரியகுலத்திலெ பிறந்து கடல்சூழ்ந்த பூமியின்கண்ணுள்ள சீவர்களுய்யும்பொருட்டு நீதியாகவே அரசுசெய்தவன். அரசருக்கு அரசனுகவே யுள்ளவன். தசரதனென்னும் பெயரினையுடையவன் அறுபதினுயிரம் வருடம், அரசாண்டவன். அவன் தனக்குப் புத்திரரில்லாமல் மெலிவையடைந்தான். புத்திரரை வேண்டிச் சிவபெருமானை நினைந்து மனமுருகி நின்றான். அசுவமேதயாகம் முதலான வேள்விகளெல்லாஞ் செய்து புத்திரப்பேறு பெற்றுக்கொள்ளாதவனுகிய அரசன் பின்பு நினைத்தற்கரிய சிவார்ச்சனையின் பலத்தினுல் இராமன் முதலாகிய நால்வரைப் புத்திரராகவே பெற்றுக்கொண்டு அதிக சந்தோஷமாகவேயிருந்தான் அந்த இராமனே திருப்பாற் கடலின்கண்ணே ஆதிசேடன்மீது யோகநித்திரை செய்கின்ற நாராயணன் அந்த இராமன் கற்கவேண்டிய நூல்களெதுவோ அவைகளெல்லாங் கற்றுக்கொண்டான். அறுபத்துநாலு கலைஞானங்களையுந் தெளிந்தா விசுவாமித்திரருடனே தென்தேசமடைந்து தில், உரு யக் கொலைசெய்தான். விசுவாமித்தி நின்றான். து தம்பியாகிய இலக்குமணனு

டனேயும், மிதுலேயை அடைந்து ஒரு வில்லே முறித்துச் சீதையை விவாகஞ்செய்தான்.

சீதையை விவாகஞ் செய்து வரும்போது மழுவாயுதத்தை யுடைய பரசிராமன் கையில வில்லேப்பறித்தான். இளவரசுப்பட்டத்தைச் சிறியதாயிஞலே நீக்கப்பெற்றுத் தனது கைவில் லுந் தம்பியாகிய இலக்குமணனுந் துணேயாகவே தனது மனேயாளாகிய சீதையை அழைத்துக்கொண்டு தண்டகவனத்திலே சென்றிருந்தான். அந்தத் தண்டகவனத்திலே அகத்தியர் பாதத்தை வணங்கிச் சிந்தையைத் தேற்றுவதாகிய சிவஞானத்தை அறிந்தான். சிவபெருமானுடைய பாதத்தையே துதித்து வணங்கிஞன். பஞ்சப்பழுவம் என்கின்ற வனத்திற் சென்றிருந்தான். மாயமான்பின்னே சென்று சீதையைப் பறிகொடுத்தான். சீதையை இராவணன் கொணடுபோய் இலங்கையிலே சிறைவைத்த செய்தியை அறியாதவஞய் தன ஹுயிர்நீங்கும்படியான துன்பசாகரத்திலே வீழ்ந்தான். தம்பியாகிய லக்குமணனுடனே சீதையைத்தேடி வனங்கடோறுஞ்சென்று ஊணேயும் உறக்கத்தையும் நீங்கி மெலிவுற்ருன். அனுமனே நட்புக்கொண்டு அவ்வனுமன் சகாயத்திஞல் சுக்ரீபனே நட்புக்கொண்டான். ஒரு அம்பிஞலே ஏழு

மராமரத்தை அரிந்து வீழ்த்தினன். மறைவாக நின் றம்பேவி வாலியைக் கொலைசெய்தான். எழுபதுவெள்ளக் குரங்குகளோடு கடலை அடைத்து இலங்கையிலே சென்றான். இராவணனுடனே சண்டைசெய்து இராவணனையும் அவன் சுற்றத்தாரையும் கொலைசெய்து சீதையைச் சிறைச்சாலையிலெடுத்தான். இராவணன் தம்பியாகிய விபீஷணனுக்கு முடிசூட்டி இலங்கைக்கு அரசனாகவே வைத்தான். தனது மனைவாளாகிய சீதையோடும் தம்பியாகிய இலக்குமணனோடும் சுக்கிரீபனோடும் அநுமனோடும் அங்கதனோடும் சாம்பவனோடும் மற்றுங் குரங்குகளோடும் புட்பவிமானத்தின்கண் ணேறிச்சென்று சேதுவை அடைந்தான். அந்தச்சேதுவிலே சிவலிங்கந் தாபித்துச் சிவார்ச்சனைசெய்து இராவணன் முதலாயினோரைக் கொன்ற பாவந் தீர்ந்தான். பின்பு சேதுவிலே சிவாலயம், திருக்குளம், திருமடம், அந்தணர்க்கிருக்கை முதலானவற்றைச் செய்தான். சிவலிங்கத்தை வணங்கி புட்பவிமானத்திலேறித் தனது தேசத்தை அடைந்து முடிதரித் தரசாண்டான். சைவமணங் கமழுமபடிக்கு விபூதி உருத்திராக்கம் அணிந்து பஞ்சாட்சரஞ் செபித்தான். நூறு அசுவமேதயாகம் அன்பினலேசெய்தான். சிவபெருமானைக்

தன துள்ளத்திலேவைத்துப் பூசித்தான். தனது நாயகியாகிய திருவுடனே வைகுந்தமடைந்தான். தனது திதித்தொழிலை முன்போலவேசெய்தான்.

உபதேசகாண்டம் இராமாவதாரச்சருக்கம்.

இத்திறநிகழ்ந்தபின்னாமனுகுலத்தெய்திவெய்திற்
உந்துவெஃகடினைநீர்வேலியுலகுயிர்தழைப்பவோங்கி
முந்தவெண்கவிகைவேந்தன்றசரதனென்பான்மூரி
மந்தமால்யானைவேந்தாவணங்குறுமன்னர்மன்னன்.

அறுபத்தாயிரவருடமளித்தானவனன்றேர்
சிறுவற்புல்லுஞ்செல்வமிழந்தான்றெருமந்தான்
மறுவைக்குங்கண்டத்தரனிருதாள்வழிபட்டா
னூறுநட்புற்றானன்புடனங்கமுருகுற்றான்.

ஆசறுவேள்வியனைத்துஞ்செய்தானதனாலோர்
மாசறுமைந்தர்ப்பெற்றினிதெய்தும்வழிகாணான்
பூசலனங்கற்செற்றபிரானைப்புனைவேணி
யீசனையன்பிற்கைதொழுதுற்றானிடரற்றான்.

மூளாக்காரோக்கின்றவிராமன்முதலோரை
யுளரிக்கும்பேராசையுவட்பினொடும்பெற்றான்
றளரித்துன்பச்சாகரவெள்ளக்கரைகண்டான்
வளரிக்காடற்சாபனையொப்பார்வளர்மைந்தா.

செவ்வரிமுன்னோன்கோசிகனோடுந்தென்பாலுற்
றல்லல்விளைக்குந்தாடகையைச்செற்றவனோடும்

வில்லொடுமற்றைத்தம்பியொடுங்கோமிதிலைப்போ
யொல்லையெடுக்குஞ்செஞ்சிலைவெற்பொன்றொடித்தந்தான

வாரிணரோதிச்சீதைமணந்தாள்வருமெல்லைக்
கூரமழுவங்கையிராமனளிக்குங்குனிசாபம்
ப்பாரடவென்றுகரங்கொண்டந்தன்புயலிற்றந்
தாதிரைவேலித்தன்னகருற்றானடல்பெற்றான்.

செங்கோலுய்க்கும்பொன்முடிதப்பிச்சிறுதாயால்
வெங்கோல்வில்லுந்தம்பியுமேமெய்த்துணையாக்
கொங்காரகோதைபின்செலவெங்கான்குறுகுற்றான்
பொங்காரஞ்சூழ்தண்டகமெய்திப்பொலிவுற்றான்.

அந்தவனத்திறசெந்தமிழ்வெற்போனடிபேணிச்
சிந்தைதெளிக்குஞ்சின்மயமெல்லாந்தெளிவுற்றான்
பைந்தொடிடாகன்பங்கயபாதம்பரவுற்றா
றுந்துசினைப்பட்டஞ்சப்பழுவக்கானுடனுநிற்றான்.

பொன்னிறமானின்பின்னவனேகப்புயலூரு
மின்னிடைமானைவெங்கணரக்கன்வெருவச்செய்
தன்கிலைகொண்டான்வெஞ்சிறைவைத்தானதனாலே
தன்னுயிரேகப்பேதுறுமெய்யிற்றளாவுற்றான்.

தம்பியொடுஞ்சென்றவ்வனமெங்குந்தடவுந்தான்
வெம்பிவெதும்பிக்கண்டுயில்கொள்ளான்மெலிகாலத்
திம்பரடைந்தான்மாருதிநட்டாலெழுவானத்
தும்பரினன்சேய்தன்னொடுநட்பானுறவுற்றான்.

மாமரமேழூர்திண்சரமொன்றான்மடிவித்தான்
மேமரியன்னோன்வாலியையம்பால்விளிதந்தான்
காமாகடும்போரொழுபதுவெள்ளக்கவியோடும்
பாமருதென்பால்வேலையடைந்தேபடருற்றான்.

தெண்டிணீர்வேலித்திண்கணைகோலிச்செலவுற்று
மண்டமரிட்டுச்செஞ்சிலையொன்றால்வயமேவிக்
கொண்டவரக்கன்புன்றலைபத்துங்குலையோடே
துண்டமுறுத்தித்தன்படரொல்லாந்தொலைவுற்றான்.

முற்றுமரக்கன்றம்பிதனக்கம்முடிசூட்டிப்
பொற்றொடியோடுந்தம்பியொடுந்தின்பேர்ராடல்
பெற்றகவிக்கோமாருதியோடும்பெருவெம்போர
மற்றையரோடும்புட்பகமேறாவரலுற்றான்.

வந்திழிவுற்றுச்சேதுவினோர்பான்மயில்டாகத்
தெந்தைபிரானுக்கர்ச்சனைசெய்தாணிகலாடித்
தந்தபெரும்பாவந்தொலைவுற்றான்றனிவெள்ளேற்
றந்தனனுக்கங்காலயமுற்றுமமைவித்தான்.

செய்வனயாவுஞ்செய்துமுடித்தான்சிவலிங்கங்
கைதொழுதந்தப்புட்பகமேறிக்கடிதிற்போய்
வையமளிக்கும்பொன்முடிபெற்றான்மகிழ்பெற்றான்
சைவமணக்கச்சிந்தைதிருத்தித்தனிநின்றான்.

ஐம்பதிரட்டிக்கும்பரியாகமருளிற்செய்
தும்பர்வணங்குந்தற்பரனைத்தன்னுளம்வைத்துக்

தம்டலைமுந்நீரவையமளித்துக்கடைசெல்லாச்
செம்பதுமத்தாடன்னுடுமுன்னைத்திதிபெற்றான்.

## விட்டுணு சிவபெருமானுக்குக் கண்மலர்சாத்திச் சக்கரம் பெற்றது,

விட்டுணுவானவர் தனது கண்ணைப்பிடுங்கிச் சிவபெருமானுடைய பாதத்திலே மலராகச் சாத்திக் கமலக்கண்ண னென்கின்ற பெயரையுஞ் சக்கரத்தையும் பெற்றனர். விட்டுணு அடியார்களும் கமலக்கண்ணனென்றே துதித்தனர்.

## கூர்மபுராணம் மாயோன் நேமிபெற்ற அத்தியாயம்.

வையம்பொதிந்த செங்கனிவாய் மாயோனன்புக் குன்மகிழ்வுற், றையன்கையாற் புறநீவியடியிற் புனைந்தமலரக்கண்ணு, மெய்தநல்கிச் சுதரிசனமென்னுஞ் சுடராழியுமீந்து, செய்யக்கமலக் கண்ணனெனும் பெயருஞ் சிறப்பினொடு மளிததான்.

## திருவாய்மொழி விட்டுணுபத்தர்கள் சொன்னது.

செக்கர்வானச்சடையான்சேவடியில்முன்னாளில்
மெய்க்கண்ணிட்டுச்சக்கரநீபெற்றவிளையாட்டேயோ
மைக்கண்மாமேனியனேவாளரக்காகோளரியே
யெக்கலம்புடைசூழும்திருக்குறுங்குடியானே.

## சடகோபர் திருவாய்மொழி.

*தாமரைக் கண்ணனை விண்ணோர் பரவுந் தலைமகனைத் துழாய்விரைப், பூமருவு கண்ணி யெம்பிரானைப் பொன் மலையை, நாமருவி நன்கேத்தி யுள்ளிவணங்கி நாமகிழ்ந் தாட நாவலா, பாமருவி நிற்கத்தந்த பான்மையேய் வள்ளலே.*

### உபதேசகாண்டம்

### திருமால் சிவார்ச்சனைச்சருக்கம்.

*நின்பாலுருகி நினதடிக்கீழ் நெடுங்கண் சாத்து நிலையுலக, மன்பாலறிவா னெனக்கிருக ணம்போருகத்தி னருள் கென்றான், மின்பா லுகந்தோ னஃதருளிவேண்ட வேண்டும் வரங்கொடுத்தான், பொன்டான் மருமத் திகிரியினு னடைந்தா னமரர் புடைபோற்ற.*

## சிவார்ச்சனைசெய்து விட்டுணு மாயையைப் பெற்றுக்கொண்டது.

விட்டுணு திருவாரூரிலே சென்று, சிவலிங்கந்தாபித்துச் சிவார்ச்சனைசெய்து சிவபெருமானிடத்திலே மாயைகளெல்லாவற்றையும் பெற்றுக்கொண்டதினால், மாயன் என்கின்ற பெயரைப்பெற்றனன். விட்டுணு தாம்பெற்ற மாயையினால் வேண்டிய வேண்டிய வடிவங்களை அடைவார். அன்றியும் மாயைசெய்து சகல ஆன்

மாக்களையும் மயக்குவார். தம்பகைவராகிய அசுரரைக் கொலையுஞ் செய்வார்.

உபதேசகாண்டம்
திருமால் சிவார்ச்சனைச்சருக்கம்.

ஆயமாயையினுங்கவருடறறுவதழுக்க
மாயையாவையுமென்னுழைவழங்குதிவழங்கிப்
போயவற்செகுத்திடுதியென்றெமக்கருள்புரிவா
யேயகாரணமீதெனச்சீதரனிசைத்தான்.

சங்குதாங்கியோனுரைத்தனதிருச்செவிசாத்தி
யெங்கணுயகனுங்கவற்கினிதுளமிரங்கிப்
பொங்குமாயைமற்றியாவையுமவற்கெனப்புரிந்தான்
செங்கண்மான்முகின்மாயனென்றொருபெயர்சிறந்தான்

**மாயனென்பதற்குக் காரணம் வயிணவர் கூறுவதை மறுத்தல்.**

எம்பெருமானுகிய மாயன் உமது சிவபெருமானிடத்திலே மாயையைப் பெற்றுக்கொண்டவனன்று தமது இச்சையினலே மாயையாகி உயிராகி மாயாகாரியங்களாகிய தனுகரண புவனபோகங்களாகி நின்று மாயையினலே ஆன்மாக்களைப் பந்தஞ்செய்து மாயைக்குக் கர்த்தாவாகவே யுள்ளவன் பந்தஞ்செய்த மாயையை மாயனலே போக்குவதன்றி ஏனைத்தேவர்களாலே போக்குவது கூடாதென்றெண்ணி மாயனை

வணங்கினால் பந்திக்கிருந்த மாயைபோம். மாயைபோனால் மாயன் வைகுந்தஞ் சேர்ப்பன் என்னில், மாரீசனானவன் மாயத்தினாலே மானாகவந்து நின்றதை அறியாமல் அம்மாரீசனை மானென்றெண்ணி அவன் மாயையிலகப்பட்டுத் தன்மனைவியாகிய சீதையை இராவணனுக்குப் பறிகொடுத்து மதிமயங்கின மாலை மாயைக்குத் தலைவனென்று கூறுதல் அடாது. அன்றியும், மாரீசனை மானென்றெண்ணிக் கொலைசெய்தும், இராவணனானவன் மாயத்தினாலே பிராமணனாகவே வந்த செய்தியை அறிந்த சீதையானவள் அக்கினியிலே விழ; அக்கினிதேவன் அச்சீதையை அடைக்கலமாகவே ஏற்று, மாயாசீதையை இராவணன்முன் விடுப்ப, அவ்விராவணன் மாயாசீதையை எடுத்துக்கொண்டு போய் இலங்கையிலே சிறைவைக்க சீதை அக்கினியில் வீழ்ந்து அவ்விடமிருக்க அதனை அறியாமல் இலங்கையிலே சென்று இராவணனைக் கொலைசெய்து, அக்கினிதேவனாலே சீதைசெய்த செய்கையை அறிந்து, மாரீசனைக்கொன்ற பாவமும், இராவணனைக் கொன்ற பாவமுந் தீரும்பொருட்டுச் சேதுவிலே சிவலிங்கந் தாபித்துச் சிவார்ச்சனைசெய்து கொலைப்பாவந் தவிர்ந்தார் உமது கடவுளாகிய மாயன்.

## சிவஞானசித்தியார் பரபக்கம்.

*மாயையா யுயிராய் மாயாகாரிய மாகிமன்னி, மாயையாற் பந்தஞ்செய்து வாங்கிடு மவனுமன்றி, மாயைபோ காதென் றெண்ணி மாயனை வணங்கப் பின்னை. மாயைபோம் போனான்மாயன் வைகுண்டம் வைப்பனன்றே.*

என்னில்;

*மாயமான் றன்னைப் பொய்மா னெனவறியா தரக்கன், மாயையி லகப்பட்டுத்தன் மனைவியைக் கொடுத்தான் றன்னை, மாயைக்குக் காத்தாவென்பை மதிகெட்டங் கவனைக்கொன்று, நாயனா தமைப் பூசித்தான் கொலைப் பாவ நணுகிடாமே*

### விட்டுணுவினுண்மை இன்னதென் றுணர்த்தல்.

மாயை உயிர்களெனவேவராது. உயிர்கள்மாயை ஆகவே வராவாம். மாயன் உயிர்களாக வும் மாயைஆகவும் வரான். உயிர்களும் மாயையும் மாயனாகவே வராவாம். அனாதியாகவே பதி, பசு, பாச மிருக்கின்றது. மாயனிடத்திலே சிவ பெருமானுடைய திருவருள் பதிந்திருத்தலால் அம்மாயன் வேண்டிய வேண்டிய வடிவங்களும் செய்கைகளும் குணங்களுமாய்த் தோன்றுவன் சிவபெருமானுடைய திருவருளுண்டாகா விடத்து மாயனும் மாயனாகான்.

## சிவஞானசித்தியார் பரபக்கம்.

மாயைதானுயிர்களாகாவுயிர்கடாமாயையாகா
மாயவனிவைதானாகானிவைதானுமாயனாகா
வேயுமாமனுதியாகவிறைபசுபாசமென்றே
தூயவுன்கலபபின்றலேயெல்லாமாய்த்தோன்றுவான்காண்

## கூர்மபுராணம்

பிரகிருதி தோற்றமுறைத்த அத்தியாயம்.

நாரத்திலமாந்தவாற்றால்நாரணனிமையோர்தம்மிற் [ மை
சீருற்ற மகத்தாம்வாற்றான் மகேச்சுரன் சேர்ந்தோர் மா
வோமுற்றுமறிந்தவாற்றானரணிவாவிளையாட்டதன்றே
நீர்முற்றுமண்டமீன்றுகாத்தவைநீக்குவானே.

### விட்டுணு மாயையால் ஆன்மாக்களைமயக்குவன்.

நாராயணன் சொன்ன பகவற்கீதை அருச்சுனனை மயக்கச்செய்த மயக்குநூலே ஆம். அவ்விட்டுணுவும் முத்திநெறியை விலக்கும் மாயையாம். மாயன் மாசில்லாதவனாகி மாயையைப் பொருந்துவனென்று சொல்லும நூல் குழப்புநூலே ஆம். பகவற்கீதை கொலைநூலே ஆம். பகவற்கீதையை அறிவுடையோர் மெய்நூலெனக் கொள்ளார்கள். அந்நூல் துரியோதனாதியர்களைக் கொலைசெய்விக்கப் புறப்பட்ட நூல ஆம்.

## சிவஞானசித்தியார் பரபக்கம்.

பார்த்தனு ரிரதமேறிப் படைதனைப் பார்த்துச் சாரைவக், கூர்த்தவம் பாலேயெய்து கொன்றர சாளேனென்னத், தோத்தனி லிருந்துமாயை செய்நம்மால் கொல்லச்செப்பும், வார்த்தைநூ லாக்கிக் கொண்டாய் புரந்தொருன் மதித்திடாயே.

பாசத்தைப்பசுக்கள்விட்டுப்பதியினையடையமுத்தி
பாசறறவாகமங்களறைந்திடவறிவின்றிங்கே
பாசற்றமான்மாசாகிமாயையுமுறுவனென்னிற்
கூசிப்பின்கொள்ளாநல்லோருனக்காமிக்குழப்புநூலே.

## இராமலிங்கமன்றென்பதை மறுத்தல்.

"உலகத்தாருண்டென்ப தில்லென்பான்வையத்
தலகையாவைக்கப்படும்"

எனவே திருவள்ளுவர் முதலாகிய அறிவிற்சிறந்தோர் கூறும் வாக்குக்கஞ்சாமலும், சேதுவிலே இராமன் சிவலிங்கந்தாபித்துப் பூசித்தானெனவே வான்மீக இராமயணத்திலுள்ளவாறு கம்பராமாயணத்திலும் இவ்விரண்டிலு முள்ளவாறு பாரதம், சிவஞானசித்தியார், கூர்மபுராணம், உபதேசகாண்டம், பெரியபுராணம் ஆகிய இவைகளிலும், இவைகளி லுள்ளவாறு சேதுபுராணத்திலுங்கூற, வயிணவர் நமது பெருமானாகிய இராமன் சிவலிங்கந் தாபித்துப் பூசைசெய்து

உமது சிவபெருமானை வணங்குவானுவென்று கூறுவனதை ஆராய்ந்துபார்க்கில் மிகவும் நகைப்புக்கிடமே ஆம். காசி முதல் சேதுபரியந்தமுள்ள புறச்சமயவாதிகளாகிய துலுக்கர், கிறிஸ்தவர், சுத்தோலிக்கர், சயினர் முதலாயினோர்களும், வயிணவத்துக்கு விரோதமில்லாத ஸ்மார்த்தர்களும், பிறருமாகிய சனங்கள் இராமேசுரம் இராமேசுரம் என்றும், இராமலிங்கம் இராமலிங்கம் என்றும், இராமநாதா இராமநாதா என்றும், இராமலிங்கா இராமலிங்கா என்றும், நாவாலே தேனும் பாலுங் கருப்பஞ்சாறுங் கற்கண்டும் கக்கக்கக்கத் துதிக்கின்றார்கள். இதனை வயிணவர் மறுத்தல் தமது கடவுளாகிய இராமனுக்குக் குறை வுண்டாகுமெனக் கண்டீம்.

## இராமன் சீதைக்குச் சேதுவின் பெருமையைக் கூறல்.

இராமர் இராவணனைக் கொலைசெயது சீதையைச் சிறையெடுத்துச் சேதுவில் வந்து சீதையைநோக்கிக் கூறுதல். பேதாய்! இது எதுவோ வென்றால், சேது நான் உன்னைப்பிரிந்த பின்பு அநுமன் இலங்கையிலேசென்று உன்னைக்கண்டு உனது செய்தியை எனக்குச்சொன்னபின்பு இச்சேதுவை வானரத்தலைவர்கள் கொ

குதததது இச் சேதுவினுடைய பெருமையை ஆராயின், பிரமனாலும் அறிதல் கூடாது. பெண்ணே! நான் எப்படிச்சொல்வேன். ஆயினும் அன்பினாலேகேள் மாதா பிதா தேசிகர் ஆகிய இவர்களுக்குத் தீங்குசெய்தோரும், தன்னைச் சூழ்ந்திருந்த சுற்றத்தாரைக் கெடுத்தோரும் ஆகிய இவர்கள் இச்சேதுவிலெய்தி விதிப்படி பூசிக்கில் தேவராவார். இந்திரனாலயன் தனது சிறகுகளைக் கொய்வானென்றஞ்சிச் சமுத்திரத்திலே வீழ்ந்த கந்தமாபருப்பதமிது காணுதி. இதனைத் தரிசித்தவர்களுடைய பாவமானது நீங்கும். இது சேது பாவனம். இந்தச் சேது பாவனதீர்த்தம் மிகுந்த சிறப்பினையுடையது கங்கை யமுனை கோதாவிரி காளிந்தி முதலாகிய நதிகளிலே ஆடினால் அல்லாது பாவம் நீங்காது இந்தச்சேது பாவனத்தைக் கண்டபோதே பாவம் நீங்கும். பசுவையும் குரவனையும் முனிவரையும் பெண்களையும் சிறுபாலனையும் அடைக்கலம் புகுந்தோரையும் ஆகிய இவர்களைக் கொலைசெய்தோர் இச்சேதுவில் வந்து மூழ்குவார்களாயின் அவர்கள் இந்திரராவார். வின்முனியினால் நான் அடையாளமிட்டுவைத்த இந்தச் சேதுதீர்த்தத்திலே நாவாலியச்செலுத்திச்சென்ற பஞ்சபாதகரும் தாங்கள் இருபத்

தொரு பிறவிகளிலே செய்த பாவங்களை நீங்கித் தேவர்களுக்கெல்லாந் தலைவராவார். பரமசிவனுடைய சடையிலே இருக்கின்ற கங்கையானவள் நான் சேதுவாகவே யிருக்கப்பெற்றிலேனென்று மிகுந்த தவத்தைச் செய்கின்றாள். ஆதலினாலே இந்தச் சேதுவின் பெருமையை எவ்வாறுரைக்கலாம் பெண்ணே.

கம்பர் இராமாயணம் மீட்சிப்படலம்.

நன்றுதனின்னைநீங்கிநாள்பலகழிந்தபின்றை
மன்னவனிரவிமைந்தன்வான்றுணையாகநட்டு
பின்னைமாருதிவந்துன்னைப்பேதறுத்தனதுபெற்றி
சொன்னபின்வானரேசர்தொகுத்ததிச்சேதுகண்டாய்.

மற்றிதன் றூய்மை யெண்ணின் மலரயன் றனக்குமெட்டா, பொற்றொடித் தெரிவை யானென் புகலுகேன் கேட்டியன்பால், பெற்றதாய் தந்தையோடு தேசிகர் பிழைத்துச் சூழ்ந்த, சுற்றமுங் கெடுத்துளோரு மெதிர்தரிற் சுரர்களாவர்.

இந்திரற்கஞ்சிமேனாளிருங்கடல்புக்குநீங்காக்
கந்தரசயிலந்தன்னுட்கண்டவாவினைகடாக்கும்
கந்தமாதனமென்றோதுங்கிரியிவண்கிடப்பகண்டாய்
பைந்தொடியடைத்தசேதுப்பாவனமாவதென்றான்.

கங்கையோடியமுனைகோதாவிரியொடுகளிந்தைசூழ்ந்த
பொங்குநீர்நதிகள்யாவும்படிந்தலாற்புன்மைபோகா

சங்கெறி தரங்கவேலை தட்டவிச்சேதுவென்னும்
இங்கிதினெதிர்ந்தோர புன்மையாவையுநீக்குமன்றே.

ஆவினைக்குரவரோடுமருமறைமுனிவர தம்மைப்
பாவையாகுழவையின்சொற்பாலரைபயந்துதம்மின்
மேவினவவரைச்செற்றோரவிரிகடற்சேதுவந்து
தோய்வரேலவர்கள்கண்டாய்சுராதொழுஞ்சுரர்களாவார்.

மரக்கலமியங்கவேண்டி வரிசிலைக்குதையாற்கீறித்
தருக்கியவிடத்துப்பஞ்சபாதகரோனுஞ்சாரின்
பெருக்கியவேழுமூன்றுபிறவியும்பிணிகணீங்கி
நெருக்கியவமராக்கெல்லாநீணிதியாவரன்றே.

நெற்றியினழலுஞ்செங்கணீறணிகடவுணீடு
சுற்றையின்சடையின்மேவுங்கங்கையுஞ்சேதுவாகப்
பெற்றிலமென்றுகொண்டுபெருந்தவம்புரிகின்றாளால்
மற்றிதன்றூய்மையெவ்வாறுரைப்பதுமலர்க்கண்வந்தாய்.

## கூர்மபுராணம் இராமன் சிவலிங்கப் பிரதிட்டைபண்ணின அத்தியாயம்

சேதுவினெய்தி வரிசிலையிராமன் சினகரமணிபெறக் கோலி, யாதியுமுடிவு மறிவுருலிங்கந் தன்பெயராலினி தமைத்துத், தூதுணங்கனிவா யணங்கொடு மிளவ றன்னொடுஞ் சூழ்ந்துநின் றிறைஞ்சித், தாதவிழ்மலர்தூய் நெஞ்சகங்குழைந்து தடங்கணீ ரொழுகிடத் துதிப்பான்

## உபதேசகாண்டம் இராமாவதாரச் சருக்கம்.

வந்திழிவுற்றுச்சேதுவினோபான்மயில்பாகத்
தெந்தைபிரானுக்கர்ச்சனைசெய்தானிகலாடித்
தந்தபெரும்பாவந்தொலைவுற்றன்றனிவெள்ளேற்
றந்துணனுக்கங்காலயமுற்றுமமைவித்தான்.

## பெரியபுராணம்

### திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் புராணம்.

சேதுவின்கட் செங்கண்மால் பூசைசெய்த சிவபெரு
மான் றன்னைப்பாடிப் பணிந்துபோந்து, காதலுட னங்கக
ரி லினிதுமேவிக் கண்ணுதலான் றிருத்தொண்ட ரானோர்
க்கெல்லாங், கோதில்புகழ் பாண்டிமாதேவியார மெய்க்
குலச்சிறையார குறைவறுத்துப் போற்றிச் செல்ல, நாதர்
தனமகிநாடோறும் வணங்கியேத்தி நளிர்வேலைக் கரையி
னயந் திருந்தாரன்றே.

### இராமன் முனிவரை வணங்கித்துதித்தல்.

சிவபெருமானை இராமன் சேதுவிலே பூசித்
துத் துதித்து வணங்கினனென்பதைக் கேட்ட
வயினவர், அதனைச் சகிக்கவொண்ணாமல் அதிக
வேகத்தோடு சிவன்மேலே அநேக தூஷண
மாலைகளைச் சாத்தி நிந்தித்ததோடு அன்றி, அச்சிவ
பெருமானைத் தியானித்துப் பூசித்துத் துதித்த அருச்
சித்த அகத்தியர் முதலான முனிவரை இரா

மன துதித்து அவர்களடியை வணங்கினானென்பதைக் கேட்டுச் சகித்துக் கொண்டிருத்தல் மிகுந்த ஆச்சரியமே ஆம்.

சீதையோடுந் தனது தம்பியோடும் வனவாசஞ் செய்யும்போது எதிரே வந்த முனிவர்களுடைய பாதத்திலே அடியற்றமரம் வீழ்ந்ததுபோலவே வீழ்ந்து வீழ்ந்து வணங்கினார்

## இராமாயணம் ஆரணியகாண்டம்

## அகத்தியப்படலம்.

கண்டனனிராமனைவரக்கருணைகூரப்
புண்டரிகவாணயனநீர்பொழியநின்றான்
எண்டிசையுமேழுலகுமெவ்வுயிருமுய்யக்
குண்டிகையினிற்பொருவில்காவிரிகொணர்ந்தான்.

நின்றவனைவந்தநெடியோனடிபணிந்தான்
அன்றவனுமன்பொடுதழீஇயழுதகண்ணான்
நன்றுவரவென்றுபல்நல்லுரைபகர்ந்தான்
என்றுமுள்தென்றமிழியம்பியிசைகொண்டான்.

எழுந்தனனொய்தினரிருண்டமேகத்தின்
கொழுந்தெனநின்றவக்குரிசில்வீரனைப்
பொழிந்தெழுகாதலிற்பெருந்திருரவன்
தொழுந்தொறுந்தொழுந்தெய்வமாசிசொல்லுவார்.

## விட்டுணு சிவயோகத் திருநீதாரோன்றது.

இராமரானவர் விசுவாமித்திரருடன் தென்திசையிலே செல்லும்போது ஓராச்சிரமத்தைக் கண்டு இது யாதென்று விசுவாமித்திரரை வினவ, அவ்விசுவாமித்திரர் கூறுவார். இராமனே கேள். தங்கள் தங்கள் கணவர்களையே அன்றிப் பிறிதொரு தெய்வமில்லையென்று சிந்தையுள் நினைந்து தன்னைப்பிரிந்த நாயகன் தன்னெதிரில் வருங்காறும் மனத்தின்கண்ணே அவனை நினைந்தும் அவன் வந்தபின்பு காயத்தினால் அவனடியில்வீழ்ந்து வணங்கிப் பின்பு வாயினாலே துதித்து வணங்கும் தவத்தினையுடைய பெண்களின் சிந்தைபோலவே விட்டுணு தனது சிந்தைக் கெட்டாதவனும் தனது நாயகனுமாகிய சிவபெருமானை தனக்கு நாயகனென்றெண்ணி அச்சிவபெருமான் தன்னெதிரில் வருங்காறும். திருநீறணிந்து கண்டிகைபூண்டு சிவபெருமானை நினைந்து நூறு ஊழிகாலம் அரியதவத்திலே இருந்த ஆச்சிரமம் இதுவென்றார்.

இராமாயணம் பாலகாண்டம்

வேள்விப்படலம்.

தங்களையன்றிதெய்வந் தவம்பிறிதிலவென்றெண்ணும்
மங்கைமாசிந்தைபோலத்தூய துமற்றுங்கேளாய

எங்கணுண்மறைக்குந்தேவரறிவிற்கும்பிராக்குமெட்டாச்
செங்கண்மாலிருந்துமேனுட்செய்தவஞ்செய்ததன்றே.
பாரின்பால்விசும்பின்பாலும்பற்றறப்படிட்பதன்னுன்
டேசனடானவன்செய்மாயப்பெரும்பிணக்கொருங்குதே
ஆசொன்டானமலமூாத்திகருதியதறிதறேற்றும் [ரவாா
ஈரைம்பாணூழிகாலமிருந்தவமியற்றியிட்டான்.

## கூர்மபுராணம் இராம னவதரித்த அத்தியாயம்.

அவ்வழியகன்றுசெல்லுமருநெறியதனின்மற்றோா
திவ்வியாச்சிரமநோக்கியாதிதுசெட்புகென்னப்
பவ்வநீருலகந்தன்ஞோபதத்தினிற்பொதிந்தோன்வைகு
மிவ்விடந்தன்னைச்சித்தாச்சிரமமென்றிசைப்பரொன்றுன்

## விட்டுணு விபூதி பூசினுரென்பதற்குப் பிரமாணம் திருவாய்மொழி.

கரியமேனி மிசைவெளிய நீறுசிறிதேயிடும், பெரிய கோலத் தடங்கண்ணன் விண்ணோ பெருமான் றன்னை, உரியசொல்லா லிசைமாலைக ளேத்தி யுள்ளப் பெறநே ற்ற, அரிபதுன்டோ வெனக் கின்றுதொட்டுமினி யென் றுமே.

## இராமர் இலக்குமணா விபூதி பூசினுரொன்பதற்குப் பிரமாணம் இராமாயணம் அயோத்தியாகாண்டம் வனம்புகுபடலம்.

ஆறுகன்டனரகமகிழ்ந்திறைஞ்சினரறிந்து
றுதோயமணிமேனிய ரநெடும்புனல்படிந்தார்

ஊறுமென்கனிகிழங்கிரேடுண்டுநீருண்டார
ஏறியேகுலதெங்ஙனமென்றலுமிளையோன்.

## விட்டுணு கண்டிகை பூண்டானென்பதற்குப் பிரமாணம் திருவாய்மொழி.

உடையார்ந்த வாடையன் கண்டிகைய னுடைநாணி னன், புடையார் பொன்னூலி னன்பொன் முடியன் மற் றும்பலகலன், நடையா வுடைத்திரு நாரணன் றொண்டர் தொண்டர் கண்டீர், இடையா பிறப்பிடை தோறெமக் கெம்பெரு மக்களே.

விபூதியை விட்டுணு பூசினரென்று ஆழ்வார் கள் கூறுவார்களோ வெனில். விட்டுணுவின் பூசாவிதியையும் பிறவற்றையுங் கூறப் புறப்பட்ட பாஞ்சராத்திரத்திலே விபூதி திருமண் சலம் சந்தனம் இந்த நான்கிலொன்றை யூர்த் துவமுகமாகவும் திரிபுண்டரமாகவுந் தரித்துக் கொள வெனக் கூறுகின்றமையா லதுபற்றி ஆழ் வார்கள் கூறினர்.

## வேதமுதல்வன் ஆதிநாராயணன் என வோதும் வயிணவரை மறுத்தல்.

வேதமுதல்வனும் ஆதிதேவனும் மூவரில் முதல்வனும் ஆதிநாராயணனே ஆயின் பாரதம் இராமயணங்களாலும் விட்டுணுவின் புராண

மாகிய பாகவத புராணத்தினாலும் விட்டுணுவி ன் அடியார்களாகிய ஆழ்வார்கள் திருவாய்மொ ழிகளினாலும் காணலாமே; அவ்வாறின்றி, விட் டுணு சிவபெருமானைப் பூசித்துத்துதித்து வண ங்கினனென்றும், சிவபெருமானுடைய திருவரு ள் விட்டுணுவினிடத்திலே பொருந்தாமல் விட் டுணு திதித்தொழில் நடத்தலின்றித் துன்புற்ற னென்றும், சிவபெருமானுடைய திருவருளின் திறத்தினால் விட்டுணு திதித்தொழிலை நடத்தி யுய்ந்தானென்றும் காண்கின்றதே, இவைகளைச் சிறிதேனுஞ் சிந்தியாத வயிணவர் நமது நாரா யணனே செகத்துக்கெல்லாங் கர்த்தா, சிவன் நமது நாராயணனுடைய அடிமையென்றே பித ற்றுகின்றார்.

## எண்குணமுடையவன் எவனோ அவனே பரன்.

தன்வயம், தூயவுடம்பு, இயற்கையணர்வு, முற்றுணர்வு, பாசமோசனம், அருள்வடிவு, மு டிவிலாற்றல், வரம்பிலின்பம், ஆகிய எண்கு ணம் விட்டுணுவினிடத்து உண்டே ஆயின் விட் டுணுவே பரம். சிவபெருமானிடத்து உண்டே ஆயின் சிவபெருமானே பரம். ஆனால் எண் குணமுஞ் சிவனிடத்தும் விட்டுணுவிடத்தும் இருக்குமே ஆயின் அது பொருந்தாது.

பிரமாணம்.

தன்வயத்தவன் றூயவுடம்பினன் றூனியற்கையுணர்வி னனுகுதல், பன்னுமுற்ற வுணர்த லியல்பினன் பாசநீக்கு தல பேரருளாகுதல், மன்னுமீறில வாற்ற லுடைமையும் வரம்பிலின்பமுமாகிய வெண்குண, மின்னதாகச் சைவா கமமோது மெம்பிரான்றனை யெட்டோடும் வணங்குவாம்.

தேவர்குறள்.

கோளில்பொறியிற்குணமிலவேயெண்குணத்தான்
றாளைவணங்காத்தலை.

## தன்வயம் சிவனிடத்தன்றி விட்டுணுவிடத் தினறென்க.

விட்டுணு திருப்பாற்கடலிலே சென்று மந்த ரமலையை மத்தாக்கிக் கடலைக் கடைந்து அமிர் த மெடுக்கும்போது அக்கடலின்கண் ணின்று நஞ்செழும்போது அந் நஞ்சுக் கஞ்சிக் கயிலா யத்திலே சென்று சிவபெருமானுக்கு முறையி ட, அந்நஞ்சைத் தன் வயமாக்கிச் சிவபெருமா னுண்டு கண்டத்திலே வைத்ததினாலும், சிவ பெருமான் திரிபுர சங்காரஞ் செய்யப் போம் போது மகாமேருமலையை வில்லாகவும் வாசுகி யை நாணாகவும் விட்டுணுவை அம்பாகவும் பிர மனைத் தேர்ச் சாரதியாகவும் சந்திர சூரியர்

களைத் தேர்ச் சில்லாகவும், நாலுவேதங்களைக் குதிரைகளாகவும் சொல்லாதன எல்லாவற்றையுந் தேருக்குண்டாகிய சாங்கம் உபாங்கம் பிரத்தியாங்கங்களாகவும் அமைத்துக்கொண்டு சிரித்துத் திரிபுரசங்காரஞ் செய்ததினாலும் சறுவதத்துவாதி பதயே சிவாயநம எனவே வசனமிருத்தலாலும் தன்வயத்தவனென்ற குணஞ் சிவனுக்கே பொருந்தும்.

உபதேசகாண்டம் திரிபுரவிசயச்சருக்கம்.

பொறிப்பணுடைவிவாசுகிநாணெனவட்பொருத்தி
வெறிப்பசுந்துழாயலங்கலோன்கணையெனவியட்பக்
குறித்தவெந்நுதிடாவகற்பொருத்தினாகுதைவாய்ச்
செறித்ததூவலைவாயுவிறசெறித்தனாதிருத்தி.

ஓட்டுதேரொனத்திசைமுகன்றன்னெடுமுனைட்பக்
கோட்டோன்மறைப்பரியுகைத்தியக்கினன்கொடிஞ்சி
நீட்டுதோகிலைதிரிந்திலமத்திகைநீட்டிப்
போட்டனன்குலமாயன்புரவியம்புறந்து.

இடத்திருக்கர மேருமால்வரை சிலையேந்தி யூன்றிய தன்னேன், மடற்சரோருக வலம்படுமலாக் கரம்வாளி சுற்றிய தாங்கன், புடைத்த வெம்முலையி மாசலை திருமுகநோக்கி னன்புன்முறாற், படுத்து நோக்கினன் றன்மூந்தது புரமெனு மூன்றினும் படலைத்தீ.

## திருவாய்மொழி விட்டுணுவை பாணமாக்கினு ரென்பதற்குப் பிரமாணம்.

குழனிறவண்ணனின்கூறுகொண்ட
தழனிறவண்ணனண்ணாகரம்
விழநனிமலைசிலைவளைவுசெய்தங்
கழனிறவம்பதுவானவனே.

### எம்பெருமானுகிய நாராயணன் அம்பாகவிருந்து திரிபுரமெரித்தானென வோதும் வயினவரைத் தடுத்தல்.

விட்டுணு முதலாகிய தேவர்கள் தங்களைத் துணையாகக்கொண்டு சிவன் திரிபுரத்தைச் சங்காரஞ் செய்யப்புகுந்தானென் றெண்ண, அதனை அறிந்து சிவபெருமான் உலகங்களிலே காணப்படுவன காணப்படாதனவாகிய எல்லாவற்றையுந் தன் வயப்படுத்தி, விட்டுணுவைப் பாணமாக்கினதே அன்றி, விட்டுணுவாகிய பாணத்தை ஏவித் திரிபுரத்தைச் சங்கரியாமல் தனது வாமபாகத்திலுள்ள சத்தியை நோக்கிச் சர்வ வல்லமையுள்ள எனக்குத் திரிபுராதிகளை எதிரி யாவரோ விட்டுணு பாணமாகவும் மேரு வில்லாகவும் மற்றையதேவர்கள் துணையாகவும் வேண்டுமோவென்று புன்முறுவலால் திரிபுரத்தை எரித்தருளினர்.

பாகவதபுராணம் கூர்மப்படலம்.

அரியயனரனுய்ப் படைத்தளித்தழிக்கு மாதியாஞ்சோதியாமமலா, திரிபுரமெரித்தெம் மிடரினைக்களைந்த சிவசிவ வந்தகாந்தகனே, யெரியெழுந்துலக மேழையும்விழுங்க வெதிரந்திடு மாலமிவ்விடத்திற, சரணமுன்றுளேம் மிடாகெடுத் தாளென் றுரைத்திடச் சங்கரன் மொழிவான்.

பாரதம் பதின்மூன்றாம்போர்ச்சருக்கம்.

புரங்கையாலெரிபுராரிதன்முன
நரனெனுநாரணனெனுகியன்பினுற்
சரணபங்கயமுறத்தாழ்ந்துடன்முறை
சரணுறமுகிழ்த்திதுகழறன்மேயினன்.

கந்தபுராணம் காமதகனப்படலம்.

இந்நாரணனதியாயாவாகளு
மந்நாளமலன்பணியாற்றிடலு
முன்னவவாமொய்ந்நகையா
லொன்னாரபுரமட்டதுணாந்திலையோ.

தூபவுடம்பு

**சிவனிடத்தன்றி விட்டுணுவிடத்தின் றென்க.**

விட்டுணு பத்துப்பிறவி யெடுத்ததினுலும், இறப்பும் பிறப்பும் இருத்தலாலும், எடுத்த எடுத்த தேகங்களிலே தோல், இரத்தம், தசை,

கூழம்பு, என்பு முதலானவை இருக்கக் காண்கை யாலும், காலாந்தரங்களிலே சிவபெருமானாலே சங்கரிக்கப் படுதலாலும், சங்கரித்தபின்பு சிவ பெருமானாலே உற்பத்தியைப் பொருந்துதலா லும், விட்டுணுவைத் தூயவுடம்பினனென்று கூறுதல் கூடாது. சிவபெருமா னிவ்வாறின்றி நிற்றலாலும், சிவபெருமானை நின்மலதேகியெ ன்று வேதம் ஆகமம் புராணம் முறையிடுதலா லும், ஒரு கருப்பாசயங்களிற் பட்டிலராதலினா லும், சர்வமுமழிந்துந் தா னழியாமையாலும், நரை திரை மூப்பு முதலானவை யில்லாததினா லும், தூயவுடம்பின னென்பது சிவபெருமானு க்கே யுரியனவாம்.

வள்ளலார் உபதேசமாலை.

யோனிவழியேயுதித்தவ்யோனிவழியேநினைந்தவ்
யோனிவழியேயொடுங்குமூமாகாள்—யோனிவழி
வாராவொருவனையேவந்தித்தால்யோனிவழி
வாராவகையருளுவான்.

விட்டுணு பிறப்புயிறப்பு உடையனென்பதற்குப் பிரமாணம் பகவற்கீதை.

சாவாதுபிறவாதுதனிமுதலாயிருந்தநா
ளுவாலிவ்வுலகுபடுமழிதுயாதீர்ப்பதற்காக
மேவாதுநின்றேயென்மாயையினூன்மெய்யேபோ
லோவாதுபிறந்திடுவேனுகந்தோறுமுகந்தோறும்.

## விட்டுணுதோல் இரத்தம் தசை நரம்பு என்பு பொருந்திய தேகமுடையரோன்பதற்குத் திருட்டாந்தம்.

பிரமனானவன் நானே பிரமமென்றகங்காரங் கொண்டபோது சிவபெருமானுடைய அருளா லுற்பவித்த வயிரவக்கடவுள் அப்பிரமனுடைய சிரசிலொன்றை விரலின் நகநுனியினாலே கிள்ளி, அப்பிரமனுடைய செருக்கைநீக்கித், தன்னைப் பரமெனவேமதித்திருந்த விட்டுணு பக்கலில் வயிரவக்கடவுள் சென்று இரத்தப்பலி கேட்க, அவ்விட்டுணு சக்கரத்தினாலே தனது நெற்றியைப்பிளந்து இரத்தப்பலிகொடுக்க, இரத்தப்பலியேற்ற வயிரவக்கடவுளுடைய கையிற் கபாலத்திலே ஆயிரம் வருடகாலம் நெற்றியி லிருந்து சொரிந்த இரத்தமானது கபாலத்திலே பாதியும் நிறைந்தில. அதனால் விட்டுணு மூர்ச்சைஅடைந்து வீழ்ந்தார். அதனைக்கண்ட இலக்குமி வயிரவரைவணங்கி இந்திராணி வாணி முதலாகிய பெண்கள் சுமங்கலியாயிருக்க நான் மாத்திரம் அமங்கலியா யிருக்கலாமோ, அன்றியும் எனது நாயகன் திரிமூர்த்திகளில் ஒருவர் அல்லவோ; திரிமூர்த்திகளில் ஒருவர் இறந்தால் மற்ற இருவர்க்கும் வசையில்லையா, இவர் இறந்தசெய்கையை அவுணர் அறிந்தால் தேவரீரை

ஏசரர்களா ஆதலால் ஆவிநீங்கிய எனது நாய கனை ஆவிபெற்றுய்யும்படி அருள்செய்ய வே ண்டுமென்று துதித்து அவ்வயிரக் கடவுளால் சுமங்கலியாயினள்.

## கூர்மபுராணம வயிரவன் பலியிரந்த வத்தியாயம்.

உரியநற்பல்லியா னுதவுவனென்ன வுலகுமோரடியினிற் படுத்த, கரியவனேமிப் படையினுற்றனது கவின்வளர்ம த்தகம்பிளந்து, குருதிநீரருவி போலநின்றொழுகக் காரி கைகொள்கபா லத்திற், பருவமாயிரமாங் குருக்கவுங்கபா லம்டாதியு நிறைந்திலதன்றே.

ஆயிரமபருவஞ் செங்கண்மானுதலி னருவிபோலரத்த ம்வாங்கியதான், மேய கன்னுடலம்மெலிந்து மூர்ச்சனையா ன் மெலிதலும்விளைமலாப் பொருட்டு, நாயகிவெருவி யி ருகரநெரித்து நாட்டநீர் துளித்திடக் கலுழ்ந்து, பாய்புலிப் போத்தின தள்புனைகாரி பதமலர்பழிச்சின ளன்றே.

மருவாரசெழுங்கூந்தல்வாணிகலன் பூண்டிருப்ப
தருநீழன்மேவிசசிவாழ்விருேடிருப்ப
திருவோ திருவிளப்பாள்தேவாசூழாமணியே
கரியோனுயிரளித்தென்மங்கலநாணகாப்பாயே.

திங்கண்முடிதீதோய்திரிபுரமுன்றீயூட்டு
மெங்கள்பெருமானேயேத்துவார்கண்மணியே

கங்கைமணாளாயென்காதலனையுய்வித்து
மங்கலநாண்பிச்சைவழங்காய்வழங்காயே.

காலன்விழமுன்னங்கஞ்சப்பதம்பணிந்து
பாலனுயிர்காத்தோய்பண்ணவாகள்வியாமல்
லாலவிடமயின்றவாதிப்பரஞ்சுடரோ
மாலினுயிரளித்தென்மங்கலநாண்காட்பாயே.

மூவரொனவோதும்முதற்றேவரிலொருவ
ஞவியழிந்தாலவுணருனையேசாரோ
தேவரிடாதீர்ப்போசிற்றடிச்சிமங்கலநாண்
காவல்புரியாயேயெலன்றுங்கழைகண்ணே.

உபதேசகாண்டம் சிவபூசை
மான்மியச்சருக்கம்.

வேதநான்முகன்மயக்கமுற்றங்நிலைவீழ்ந்தான்
காதுசூற்படைவயிரவணுங்கதுகாணுப்
போதமன்னவற்களித்தரிநாட்டகம்புகுந்தான்
ழுதுலாந்துழாய்நெடுமுடியவாக்கெதிரசார்ந்தான்.

முத்தலைக்கழுவாங்கவனெற்றியின்முற்றக்
குத்தியேற்றினன்மடமடத்தொழுகியகுருதி
பத்தவாயிரமாண்டதுகபாலத்துப்பாய்ந்த
மத்தமாமதமொழிந்துறமயங்கினன்மாயன்.

## காசிகாண்டம்வயிரவன்றோன்றிய அத்தியாயம்.

இமையோர்பரவு மேற்றெகினப் பாகனுள்ளச் செருக்கினையுந், தூமியாத் திரைப்பாற் கடற்சோப்பனுள்ளச் செருக்குந் தொலைத்தியென, வமையாவெகுளிக் கனல்கொளுந் மலரோனைந்தாந் தலையதனைக், கனமதீாகாரி தன்னிடக்கை யுகிராற்கிள்ளிக் களிப்புற்றான்.

## கந்தபுராணம்.

பரமனைமதித்திடாப்பங்கையாசனன்
ஒருதலைகிள்ளியேயொழிந்தவானவா
குருதியுமகந்தையுங்கொண்டுதண்டமுன்
புரிதருவடுகனைப்பணிந்துபோற்றுவாம்.

## சிவஞானசித்தியார் பஞ்சராத்திரி மதமறுதலை.

தாதுவானதுவேதெனனிற்சங்கரன்பலிக்குச்செல்ல
தீதிலாக்கோதண்டத்தைத்திறந்தவன்விட்டடோது
போதவிந்திரமன்றேபோந்துமூச்சித்துவீழ்ந்தா
னூதுளையொழுப்பப்பின்னேகடந்தனன்கிடந்தவன்றான்.

## திருமழிசை ஆழ்வார் திருச்சந்தவிருத்தம்.

வேறிசைந்தசெக்காமேனிநீறணிந்தபுன்சடைக்
கீறுதிங்கள்வைத்தவன்கைவைத்தவன்கபாலமிசை
யூறுசெங்குருதியானிறைத்தகாரணந்தனை
ஏறுசென்றடாத்தவீசபேசகூசமின்றியே.

## திருவாய்மொழி.

ஆறும்பிறையுமரவுமுடம்புஞ்சடைமேலணிந்துடலம்
நீறும்பூசியேறூருமிறையோன்சென்றுகுறையிரப்ப
மாறொன்றில்லாவாசநீரவரைமார்பகலத்துகந்தான்
நாறும்பொழில்சூழ்ந்தழகாயநறையூர்நின்றநம்பியே.

## திருவாய்மொழி.

ஊனமாதலையொன்றேந்தியுலகெலாந்திரியுமீசன்
ஈனமாசாபநீக்காயென்னவொண்புனலையீந்தான்
தேனமாபொழில்கள்சூழ்ந்தசெறிவயற்றென்றிருப்பேர்
வானவாதலைவர்நாமம்வாழ்த்தினனுய்ந்தவாறே.

### இயற்கையுணர்வு
### சிவனிடத்தன்றி விட்டுணுவிடத்தன் றென்பது.

சிவபெருமான் தெட்சணாமூர்த்தியாகிக் லாலின் கீழிருந்து, சனகர்முதலாகிய நான்கு முனிவர்கட்கும், திருநந்திதேவருக்கும், பிரமன் விட்டுணுவுக்கும், இன்னும் அநேக முனிவர் கட்கும், உபதேசஞ்செய்ததினாலும், தனக்கொரு குருவின்றித் தானே எல்லாவற்றையும் அறிந்ததினாலும், இயற்கை யுணர்வின னென்பது சிவபெருமானுக்கே யுரியனவாம். விட்டுணு அவ்வாறின்றி, சிவபெருமானிடத்திலேயும், அகத்தியர், வசிட்டர், விசுவாமித்திரர் முதலாயினோரிடத்திலேயும், விதிப்படி தாழ்ந்தெழுந்து

புதேசம்பெற்றுக் கொண்டதினாலும், பின னேவருவதை முன்னரோ அறியாமல், அவைகள் வந்தபின்பு அறிந்துகொள்வதினாலும், விட்டுணு வியற்கை யுணர்வுடையரன்று.

## சிவபெருமானியற்கை யுணர்வினனென்பதற்குப் பிரமாணம்.

### வள்ளலார் சாஸ்திரம்.

அறிவிக்கக்குரவரில்லையன்னையும்பிதாவுமில்லை
அறிவிக்கவயலொன்றில்லையம்பலத்தாடியென்று
மறிவிக்குமம்மானேயென்றயனரிமுனிவரெல்லாஞ்
செறிவுடையடிமைசெய்வார்திருப்புலிவனத்துளானே.

### திருவாய்மொழி.

நெறிவாசற்றானேயாய்நின்றானையைந்து
பொறிவாசற்போற்கதவஞ்சாத்தி—யறிவானாம்
மாலமரரீழலறநால்வர்க்கன்றுரைத்த
வாலமமாகண்டத்தான்.

## இயற்கையுணர்வு விட்டுணுவினிடத் தின்றென்ப தற்குத் திட்டாந்தம்.

இராவணனானவன் சிவன்கொடுத்த சூலத்தை இராமன்மேல் ஏவ, அந்தச் சூலமானது யுகாந்தகாலத்திலே உருத்திரன் கோபிக்க எழுகின்ற அக்கினிக் கொப்பாகவே கோபித்துச்

செல்லும்போது அதனைக்கண்ட இராமன் அஞ்சி இதனை யான் என்செய்வேனென்று மிகு மயங்கிச் சண்டைசெய்யுந் தொழிலைவிட்டு இயாதொரு நினைவுந் தொழிலுமில்லாமல் தன்னை மறந்து நின்றார். ஆதலால் விட்டுணு இயற்கை யுணர்வினன் அன்று.

இராமாயணம் இராவணன் வதைப்படலம்.

எய்யும்மெய்யுக்தேவருடைத்திண்படையெல்லாம்
பொய்யுந்துய்யும்மொத்தவைசிந்தும்புவிதந்தான்
வய்யுஞ்சாபமோப்பெனவெப்பின்வலிகண்டான்
அய்யன்னின்றான்செய்வகையெல்லாமறிகில்லான்.

மறந்தான்செய்கைமற்றெதிர்செய்யும்வகையெல்லாம்
அறந்தானென்னும்பாதுணுக்கந்தொடாவுற்றா
அறந்தானஞ்சிக்கால்குலையத்தானறியாதே
பிறந்தானின்றான்வந்தத்துலம்பிறரஞ்ச.

முற்றுணர்வு சிவனிடத்தன்றி விட்டுணுவினிடத்தின்றென்பது.

அளவிறந்த ஆன்மாக்களுடைய கண்களுக்குள்ள செய்திகளெல்லாவற்றையும் அங்கங்கே போய் அறியாமல் ஏகமாய் நின்றறிகிற சூரியனைப்போலவே, சிவபெருமான் எங்கும் வியாபகனாய்த் தனது ஞானசத்தியைக் கொண்டே அளவிறந்த ஆன்மாக்களுடைய செய்கைகளை

லாவற்றையு மறிந்து அவ ரவர்கள் செய் கைக்குத்தக்க தனுகரண புவன போகங்களைத் தனது கிரியாசத்தியைக் கொண்டு கொடுப்பித் தலால் சிவனுக்கு முற்றுணர்வு உண்டென்பது நிச்சயம். விட்டுணு அவ்வாறின்றிச் சிலவற்றை அறிந்தும் சிலவற்றை அறியாமலு மிருத்தலால், விட்டுணு முற்றுணர் வுடையனென்பது பொ ருந்தாது.

வள்ளலார் கர்ணாமிர்தம்.

எங்கணுமிருக்கையாலுமிருவினையருத்தலாலும்
செங்கதிரமதியமீனத்தேய்க்கிடநிற்கையாலுஞ்
சங்கையொன்றின்றியெல்லாந்தானறிந்திடுதலாலுஞ்
செங்கண்மாற்கதிகனீயேதிருப்புலிவனத்துளானே.

## சிவனே பாசமோசகன் அது விட்டுணுவிடத் தினறேன்பது.

அரிபிரமனிடத்தும், இந்திரன் முதலாகிய தேவரிடத்தும், முனிவரிடத்தும், மற்றச் சீவ ரிடத்தும் பாசமிருத்தலாலும், சிவபெருமானி டத்திலே பாசமில்லாததினாலும், பிரமனாதிய ரிடத்துண்டாகிய பாசத்தை நீக்கி அவர்களு க்கு அருள் புரிதலாலும், சிவபெருமானே பாச மோசக னென்பதற் கையமில்லை.

வள்ளலார் கர்ணாமிர்தம்.

பண்டொருகாலந்தன்னிற்பதஞ்சலிக்கருளிச்செய்தான்
அண்டாகோன்வழிபட்டேத்தவநுக்கிரகங்கள்செய்தான்
முண்டகன்றிருமால்போற்றமுத்திமோக்கங்கொடுத்தான்
திண்டிறற்புலிபூசித்ததிருப்புலிவனத்துளானே."

ஆவுக்கும்புலிக்குமுன்னமனுக்கிரகங்கள்செய்தான்
நாவிக்கும்வலியனுக்குநாளைக்குமருளிச்செய்தான்
மூவாக்குமுனிவாகட்குமுதுக்குறையறிநருக்கும்
தேவாக்குமுத்திதந்தான்றிருப்புலிவனத்துளானே.

## "சிவனருளுருவினனென்பது.

எவர்கள் எதை விரும்பினார்களோ, அதை அவர்களுக்கு வஞ்சியாது கொடுக்கின்றதினாலும், சர்வசீவ தயாபரனெனவே சிவனுக்கு நாமமிருத்தலாலும் சிவனே அருளுருவின னென்பதாம்.

வள்ளலார் கர்ணாமிர்தம்.

பனைவடிவீசற்கானபடியினாற்பன்றிக்கன்றுக் [கன்
கருண்முலைகொடுத்தான்பின்னுமானைக்காயரியை விட்டா
குருவடிவாகிக்கல்லால்குறுகினாதலாலே
தெரியருண்மூர்த்திபோலுந்திருப்புலிவனத்துளானே

திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரம்.

தூண்டுசுடரனையசோதி கண்டாய்தொல்லமரர்சூளா
மணிதான் கண்டாய், காண்டற்கரிய கடவுள்கண்டாய்

ருருவாக் காற்ற வெளியான்கண்டாய், வேண்டுவார வேண்டுவதே யீவான்கண்டாய் மெய்ந்நெறிகண்டாய் விரதமெல்லா, மாண்டமனத் தாரமனத்தான் கண்டாய் மறைக்காட்டுறையு மணாளன்றானே.

## மூவரில் ஆர் அருளிற் பெரியரோன்று விட்டுணுவை வேதங்கள் வினவுதல்.

நாலுவேதமும் நாலுமுனிவர் வடிவாகி, விட்டுணுபக்கலிற் சென்று, விட்டுணுவை நோக்கித் தேவனே? பிரமன் விட்டுணு உருத்திரன் ஆகிய மூவரில் ஆர் அருளிற் சிறந்தோரென்று வினவ, விட்டுணு கூறுவார், விட்டுணுவாகிய என்னையும் பிரமனையும் உண்டாக்கிய சிவபெருமானொருவனே அருளிற் சிறந்தோன். அதற்கோர் திருட்டாந்தம் யாதெனில்; கொடிய செய்கைகளையுடைய சகுனிமைந்தன் விருகனென்பவன் அவன் விடத்தை ஒப்பவன், ஆதிஅந்தமும் உற்பத்திநாசமும் இல்லாத சிவபெருமானைப் பணிந்துபோற்ற, சிவபெருமான் கொடிய விருகனென்பவன் முன்றோன்றி வேண்டியவரம் யாதுகேளென்ன, அக்கொடியோன் நான் எவர்கள் சிரசில் கையாற்றொட்டேனே அவர்களிறந்துபோக வரந்தரல் வேண்டுமென்றான். அக்கொடியோன் கேட்டவரம் நன்றன்றாயினும் வேண்டுவார் வேணடியதை யீய்பவ னாதலால் அவ்

யென்ன, முந்தியாா சிரசுதொட்டே னவருயிா முடிதூ
வென்னடும்.

என்றனு மளித்தே மென்ன நின்சிரத் தென்கைவைத்
தாற், பொன்றிறு யென்னிலீது சரதமென் றுணைத்துப்
பொங்கிக், குன்றவில் லவன்முன்செல்லக் கூழ்நின்வெங்
கூற்றமோடப், பின்றொட ரவுணனுள்ள மயக்கியான்
பேதித்தேனுல்.

மத்தமு மறுகுஞ்சூடிப் பேயுடன் மயானத்தாடும், பித்
தன துனைபைக்கேட்டுப் பின்றொடாந் திடுவதென்னே,
முத்தலைச் சூலமேந்து மவுணநின் முடிமேற்செங்கை,
வைத்திடு கென்னவைத்தான் மணிமுடி சிதாந்துவீழ்ந்
தான்.

ஆங்கவன் மாயயான்போ யவிாமதி முடித்தவன்னல்,
வீங்கிய கருணைநோக்கி மெய்ப்புயிா சிலிாப்பக் கண்ணிா,
தூங்கிட வலஞ்செய்தன்பிற றுறுமலிா தூவியன்னேன்,
பூங்கழல் பணிந்துபோற்ற விடைநல்கிக் கயிலைபுக்கான்.

ஆதலாற் பணிந்துபோற்று மடியவர்க் கெளியனுகு,
மாதுமை பாகனல்லான் மற்றுமோா தெய்வமுண்டோ,
வேதமற் றவன்பொற்றுளே யிறைஞ்சுமி னென்றுசெப்
பத், தீதறு மறைகள்யாவுந் தெளிவொடு போயவன்றே.

## முடிவிலாற்றல் சிவனிடத்தன்றி விட்டுணுவிடத்தினறென்பது.

சிவன் திரிபுரசங்காரஞ் செய்யப போம்போ
து விட்டுணு இடபமாகச் சிவனைத் தாங்கவொ

கண்ணமற் கீழேவீழ்ந்து மெய்யெல்லாம் நெரிந்து உதிரமோட வருந்தினதினலும் கயிலாய மலையையெடுத்த இராவணனைக் காலிற் பெருவிரலாலே யூன்றி மலையின் கீழே வீழ்த்தி அவன் தேகம் நெரிந்து உதிரம் ஓடும்படி செய்ததினலும் பகீரதன் பொருட்டாகக் கோபித்து வந்த கெங்கையின் கோபத்தை அடக்கிச் சிரசிலே தரித்ததினலும் உகாந்தகாலத்திலே அக்கினி யுண்டாகும்படி கோபித்து, பிரமன் விட்டுணு ஆகிய இருவருடனே சகல லோகங்களையுஞ் சங்கரித்ததினலும் தனிதேகமாகவே நின்று சகலலோகங்களையுந் தாங்கிக்கொண்டிருந்தலாலும் சர்வசங்கார கர்த்தாவென்ற நாம மிருத்தலாலும், சிவபெருமான் முடிவிலாற்ற லுடைமையின னென்பதற் கையமில்லை. விட்டுணுவினிடத்தி லிவ்வா றில்லாததினலும் விட்டுணுவைச் சிவன் சங்கரித்ததினலும் விட்டுணு முடிவிலாற்ற லுடைமையின னென்பது பொருந்தாது.

வள்ளலார் கர்ணாமிர்தம்.

அரக்கனைமிதித்தலாலுமரிவெட்கிட்போனத்தாலு
முருக்கனலாகியண்டம்யாவையுமொருக்கலாலுஞ்
சுருக்கமிலிபுவியைத்தாங்கித்தூலமாயிருத்தலாலுஞ்
செருக்களவாற்றலுள்ளான்றிருப்புலிவனத்திலுள்ளான்.

## திருமந்திரம்.

எங்கும்பரந்துமிருநிலந்தாங்கியுந்
தங்கும்படித்தவன்றாளுணாதேவர்கள்
பொங்குசினத்துளயன்றலைமுன்னாற
வங்கச்சுதனையுதிரங்கொண்டானே.

## சிவபெருமானை விட்டுணு இடபமாகத் தாங்க வொண்ணுமற் கீழேவீழ்ந்து நெரிந்தா னென்பதற்குப் பிரமாணம் உபதேசகாண்டம் திரிபுரவிஜயச்சருக்கம்.

மூரிவெள்ளிமிலேறுவிட்டிழிந்தனன்முதல்வன்
மேருமால்வரையொருதனிவில்லொடுமேவித்
தேரினோதனியெடுத்துமிதித்தலுந்தெறித்துப்
டாருமச்சுமற்றிழிந்ததுதோத்தடம்பரப்பு.

மடுத்தெடுத்தனன்வெள்விடையுருக்கொடுமாய
னெடுத்தவப்பரம்பொறுக்கலாளிருதொளாநாசி
விடுத்தெழுந்தனகுருதிநீர்விழித்துணைபிதுங்கிப்
படுத்தபாய்வழியுமிழ்ந்தனன்குருதிநீரப்பரவை.

வெருவியேங்கினர்விண்ணவர்வெள்விடையாய்
கருவிமாமழைவண்ணனும்பொறுக்கலன் கவன்று
னிருதுணைப்பதமடக்கினன்கவிழ்தனனிவற்றுற்
பொருதிறற்கொடிவில்லியைநோக்கினர்புகல்வார்.

## இராவணனைச் சிவன் கால்விரலாலடர்த்தார்.

கயிலாயம சிவபெருமானுக்குத் திருப்படைவீடென் றறியாதவனாகிய இராவணன் அகங்காரங்கொண்டு கயிலாயத்திலே வசிக்குங் கணங்கள் சந்தவிருடிகள் முனிவர்கள் பிரமநிட்டர்கள், தேவர்கள், தவசிலர்கள், பிரமத்தலைவர்கள், சித்தர்கள், இயக்கர்கள், அரம்பையர்கள், தும்புரு, நாரதர் முதலாயினோர்கள் அச்சமுறும்படியாகவும், உமாதேவியார் அச்சத்தோடு சிவபெருமானைத் தழுவவும், கயிலாய மலையானது அதிர்ந்துபோகவும், அதிகவேகத்தோடு தூக்கினன். கயிலாய வாசிகளாகிய தவசிலரும் உமாதேவியாரும் அச்சமுற்றதை அறிந்த கருணைக்கடலாகிய சிவபெருமான் தனது திருப்பாதத்திலுள்ள பெருவிரலாலே மெதுவாக வூன்ற, அக்கொடியோனாகிய இராவணன் கயிலாய மலையின்கீழே வீழ்ந்து தனது தேகம் முரிந்து சரீரத்தினாலே இரத்தம் தாரை தாரையாகவே ஓடும்படிக்கு வருந்திச் சிவபெருமானைச் சாமவேதத்தினாலே துதித்துப் பின்பு உய்ந்தான்.

### இராமாயணம் வரையெடுத்தபடலம்.

மறைத்தவா மறுக்கமு மடக்கொடி நடுக்கமு மனத்திலுணராப, பிறைச்சடை முடிக்கடவுள் பொற்றிரு வடிப்பெரு விரற்றலையினால், நெறுக்கென வழுத்திட வுடற்

டொறை பதைப்பநிரு தற்கிறைவுறும், கறுத்தவுரு
தூனு மறக்கரு மனத்தன்வெரு விக்கதறினன்.

காயவனா யாலேமிசை வாய்பவர முக்கிய கரும்பதென
வே, சேயுயிா விசும்புநில னுந்திசைக ளுந்திசைக ளோ
டுதிாதர, வாயொரு பதுங்குருதி பொங்கிட வயங்குவரு
டங்களவையோ, ராயிரம் விலங்கலுள டங்கினன் முட
ஙகியலம் வந்தலறினன்.

வான்றிகழ் வெள்ளிவெற்பின் கீழுற்று வருந்துகின்ற
ஊன்றிகழ் வேலினானே யமைச்சாதா முற்றுநோக்கித்
தேன்றிக ழிதழியான்றன் றிருச்செவி சாரகின்கை
தான்றிகழ் வீணையாகப் பாடுதி சாமமென்றா.

அன்னதே கருமமென்று வரக்கனு மறிவுட்கொண்டு
தன்னது தலையிலொன்றைத் தடிந்துதன் கையிற்சோர்ந்த
இன்னவின் னரம்பிற்றுந்தங் கிளைமுந் லிசைகளேழால்
பன்னருஞ் சாமகீதம் பரிவுடன் பாடலுற்றான்.

அவ்வழி யவனும்பாட வரன்மகிழ்ந் தழைத்துக்கொண்டு
முப்வகை யுலகுமாள மூன்றனாக் கோடியாண்டு
மவ்வகைப் படையும்வெல்லுஞ் சந்திர வாழுமீந்தான்
மொய்வகை நிருதன்பெற்று விடைகொடு போகலுற்றான்.

## சிவன் கெங்கையைச் சடையிலடக்கினர்.

பகீரத னென்பவன் இறந்த தமது முன்னோர்
களாகிய சகரரை முத்தியிற் சேர்க்கும் பொரு

௯ரு ஆகாய கெங்கையைப் பூமியிலே அழைக்க ஆகெங்கையானது பிரமன் விட்டுணு இந்திரன் ஆகிய இவர்களுலகு பூமியாகிய யிவைகளை முழுதும் ஒருங்கே அழிக்கவந்தபோது சிவ பெருமான் தனது திருச்சடையிலே அக்கெங்கையைத் தரித்துப் பூமிமுதலானவை யழியாவகை காத்தருளினார்.

## இராமாயணம் அகலிகைப் படலம்.

மாகநன்னதி புவியிடை வருகின்மற் றவடன்
வேகமாற்றுதல் கண்ணுதற் கன்றிவே றரிதால்
தோகை பாகனை நோக்கிநீ யருந்தவந் தொடங்கென்
றேகினானுல கனைத்துமெவ் வுயிர்களுமீந்தான்.

உந்தியம்புயத் துதித்தவ னுறைதரு முலகும்
இந்திராதிய ருலகமு நடுக்குற விரைத்து
வந்துதோன்றினள் வரநதி மலைமகள் கொழுநன்
சிந்திடாதொரு சடையினிற் கரந்தனன் சேர.

## கூர்மபுராணம் இராமன் சிவதரித்த அத்தியாயம்.

மைந்தனும் வேண்டுமென்ன வளித்ததுவா னதியின்வெய்யி. னெந்தையை யன்றிமற்றுத் தரிக்குன ரில்லையென்று, நாதலில் பிரமனேக நாமவேற் குரிசிறாய, சந்திர மௌலியெய்த வளப்பினுட் டவஞ்செய்தானே.

## வரம்பிலின்பம் சிவனிடத்தன்றி விட்டுணுவிடத்தன் றென்பது.

சிவபெருமான் ஆன்மதத்துவம், வித்தியா தத்துவம், சிவதத்துவம் ஆகிய மூவகைத் தத்துவங்களுக்கு மேற்பட்டுள்ளவராதலாலும் இன்பமயமாகி அவர் இருத்தலாலும், சம்புவென்றும் சங்கர னென்றும் நாம மிருத்தலாலும் சிவபெருமா னொருவனே வரம்பிலின்ப முடையனும்.

வள்ளலார் கர்ணாமிர்தம்.

இன்பத்து ளின்பமாய நின்னடி யெய்தும் வண்ணந்
துன்பதுட் டுன்பநீங்கித் துறவிக வேங்காநிற்பா  [டார
பொன்பது மத்தோன் மாயன் புண்ணியத் தவங்க ளூற
செம்பது மத்தாள் காட்டாய் திருப்புலி வனத்துளானே.

திருக்களிற்றுப்படியார்.

பேரின்ப மான பிரமக் கிழத்தியுட
னோரின்பத் துள்ளானை யுள்ளபடி—பேரின்பங்
கண்டவரோ கண்டார் கடலுயிரித்த வின்னமுதம்,
முண்டவரோ யுண்டார் சுவை.

தேவநிச்சயவியல் முற்றும்.

# முக்குணவியல்.

## முக்குணம்.

தாமதமும் இராசதம் சாத்துவிதம் எனவே குணங்கள் மூன்றாம். இம்மூன்று குணத்தினுக்கு இயல்பாகவேயுள்ள குணங்களாவன. சாத்துவித குணவியல்பு நின்மலமாகவே யிருத்தல். இராசதகுண வியல்பு தொழில்செய்து கொண்டிருத்தல். தாமதகுண வியல்பு மயக்கமடைந்து கொண்டிருத்தல்.

## சதாசிவரூபம்.

சாத்துவிதமொளியைத்தருமெனமொழிட
ராசதம்பரவிரத்தியையாக்கும்
தாமதமந்தகாரந்தருமே.

## பகவற்கீதை.

வாய்மையவல் லாக்குணம வைமூன்றின் காரியமாய் வருகின்ற, தூய்மையுந் தொழிலு மயக்கமு மென்று சொல்லிய துறையிவை மூன்றுஞ், சேய்மைய வென்று பெற்றதபோ திரங்கல் பெறறபோ மகிழ்தல்செய் யாதான், றூன்மய லாகாக் குணங்களோ டிருந்தே யவற்றினுஞ் சலிப்பிக்கப் படாதான்.

## சாத்துவித குணத்தின் செய்கை.

சாத்துவித குணத்தின் செய்கைகளாவன. நின்மலமாகவே யிருத்தல், ஞானமாகவே யிருத்

தல், இன்பமாகவே யிருத்தல், இன்பத்தைக் கொடுத்துக்கொண் டிருத்தல், தேகம் வெண்மையாகவே யிருத்தலாம்.

### இராசத குணத்தின் செய்கை.

இராசத குணத்தின் செய்கைக ளாவன. ஆசையுள்ளது, செய்கைகளை யுள்ளது, அநேக வித சிந்தையை யுள்ளது, சிவந்த நிறத்தை யுள்ளதாம்.

### தாமத குணத்தின் செய்கை.

தாமதகுணத்தின் செய்கைகளாவன. மயக்கமுள்ளது, தீயநெறி யுள்ளது, நித்திரை யுள்ளது, ஞானத்தைக் கெடுக்கின்றது, அழுக்கைப் பொருத்துகின்றது, கரியநிறத்தை யுள்ளதாம்.

பகவற்கீதை.

பற்றுமாசின்மையாறபளிங்கொப்பது
வுற்றநல்லறிவானதுண்டாக்குவ
தெற்றுமின்படைல்லாற்றுன்பமென்பது
சற்றுமில்லதுசத்துவமாவதே.

ஓதுமாசையிற்பிறந்துள்ளது
தாதுகற்புரையுண்ணிறஞ்சார்ந்தது
பேதுசெய்வினையோடறிவைப்பின்னற்
கேதுவாயதிராசதமென்பதே.

குறியநீலமயக்கமுங்கோதிலா
நெறிகளானதிகத்தலுகித்திரை
செறிதலானதுமற்றிவற்றுற்றின்னென்
றறிவைமாய்க்குமதுதமமாவதே.

உரைசெய்சத்துவமின்பத்துய்த்திடு
மிரசதம்வினைகளோடறிவையாத்திடும்
புரைசெய்திவ்வழுக்கையேபொருத்திப் போர்த்திடுந்
தரைசெறிபுகழினுய்தமமென்கின்றதே.

## மூவரின்தன்மை கூறுகின்றது.

உருத்திரனுக்கு சாத்துவிதகுணமும், அக்குணத்துக்குடைய வெண்ணிறமேனியும், சுபாவமாகவே யுள்ளது. சங்காரகிருத்தியம் நடத்தும்போது மாத்திரைக் காலத்துக்குள்ளே தாமதகுணத்தைப் பொருந்துவராம்.

விட்டுணுவுக்கு, தாமதகுணமும், அக்குணத்துக்குரிய கரியமேனியும், சுபாவமாகவே யுள்ளது. திதித்தொழில் நடத்தும்போது மாத்திரைக் காலத்துக்குள்ளே சிவனிடத்து சாத்துவிதகுணத்தைப் பெற்றுக்கொள்வராம்.

பிரமனுக்கு இராசதகுணமும், அக்குணத்துக்குரிய சிவந்தமேனியும், சுபாவமாகவே யுள்ளது சிருட்டித்தொழில்நடத்தும்போது, மாத்திரைக்

காலத்துக்குள்ளே சிவனிடத்து இராசதகுணத்தைப் பெற்றுக்கொள்வராம்.

## சூதசங்கிதை பரமவிஞ்ஞானமுரைத்த அத்தியாயம்.

உயாசத்துவ நற்குணதேக முடையனுயுஞ் சங்கார, மயாத்தகு தமோகுண மதுடையனுயு மவிாகின்ரூ, னியலிற்பொலியு முருத்திரனுலியை தாமதவன்குண வுடம்பும், வயமாா திதிக்காகச் சத்துவநற்குண முடையோன் மாயவனே.

இராசதகுணமெய்யுமியைதருசிருட்டிக்காக
வொராதொளிரக்குணமுமுடையவனேபிரமன்
பராவுசத்துவத்தாலேபகாதருவெண்ணிறமும்
விராவுறுமிராசதத்தான்மிளிருதருசெங்நிறமும்.

தாமதகுணத்தாலேதடையறநீலநிறமு
மாமதனுன்முனிவீருருத்திரனயன்மாலிம்
மூவரும்வெங்நிறஞ்செங்நிறமுதிாநீலனிறமெய்
தாவறமுடையானெனத்தெரிதரல்வேண்டும்.

## கந்தபுராணம் அனந்தன் சாபநீங்கு படலம்.

பரவியவுயிாக்கெலாம்பாசநீக்குவா
னருளினனுகியேயமலன்மாலயற்
கிருதொழின்முறையினையீய்ந்துமற்றவைக்
குரியனகுணங்களுமுள்ளவாக்கினன்.

ஈத்தலுமளித்தலுமியற்றுவோர்க்குள
சாந்திகராசதந்தத்தஞ்செய்கையின்
மாத்திரையல்லதுமற்றவாக்கவை
டாத்திடினியற்கையாப்படகரலாகுமோ.

கந்தபுராணம் உமைவருபடலம்.

துன்றுதொல்லுயிரதொலைவுசெய்திடு
மன்றுதாமதத்தடுவதன்றியே
நன்றுநன்றதுஞானநாயகற்
கென்றுமுள்ளதோரியற்கையாகுமோ.

## விட்டுணு தாமதகுணத்த னென்பதற்குத் திருட்டாந்தம்.

விட்டுணு தாமதகுணத்த னென்பது யாதினாலெனில் தேகங் கருமையாகவே யிருத்தலினாலும், திருப்பாற் சமுத்திரத்தின்கண்ணே அனந்தன்மீது நித்திரை செய்வதினாலும், நானே பரமென்று அகந்தையைப் பொருந்திச் சிவனாலே கண்டிக்கப் படுதலாலும், வஞ்சகத்தினாலே அவுணரைக் கொலைசெய்வதினாலும் விட்டுணு தாமதகுணத்த னென்பதற்குச் சந்தேகமில்லை.

கந்தபுராணம் அனந்தன் சாபநீங்கு படலம்.

நேமியோற்குருவெலாநீலமாயதும்
தோமறுகடலிடைத்துயில்கொள்டாண்மையு

மேமுறுமகங்கதையும்பிறவுமெய்துமேற்
ருமதராசதந்தானுமுற்றவே.

அறிவொருங்குற்றுழியனையன்கண்ணுத
லிறைவனைவழிபடீஇயேத்தியின்னரு
ணெறிவருதன்மையுநீடுபோதமும்
பெறுதலிற்சாத்திகமுறையும்பெற்றுளான்.

**பிரமன் இராசதகுணத்தனென்பதற்குத்
திருட்டாந்தம்.**

பிரமன் இராசதகுணத்த னென்பது யாதினு னெனில், தேகமானது சிவந்திருத்தலினுலும், நானே பரம்பொருளென்று அகங்கை கொள்வதினுலும், மிகுந்த ஆசைகொள்வதினுலும் இராசத குணமுடைய னென்பதற்குச் சந்தேக மில்லை.

கந்புராணம் அனந்தன் சாபநீங்குபடலம்.

மேனிபொற்கென்றலின்விமலவான்பொரு
ளெனுமருட்கையினவையிலீசனைத்
தானுணாதெளிவின்றிறவத்திற்பூசையி
லானதுகுணமெலாமயன்றனக்குமே.

**சிவன் தாமதகுணம் பொருந்தினதற்குக்
காரணம் கூறுகின்றது.**

தாமதம், இராசதம், சாத்துவிதம், ஆகிய, முக்குணத்தில் ஒன்றுமின்றிய சிவம், சங்கார

கிருத்தியஞ் செய்யும்பொருட்டுத் தாமதகுணத்தைப் பொருந்தினர். தாமத குணத்தினலே அன்றி, ஏனைய இராசத சாத்துவித குணத்தினலே சங்கார கிருத்தியம் நடவாது. சிவபெருமானலே சங்கார கிருத்தியம் நடப்பதன்றி, ஏனையபிரம விட்டுணுக்களாலே சங்காரகிருத்தியம் நடவாது. சங்காரகிருத்தியஞ் செய்வதற்கு கோபமுண்டாகவேண்டும். அக்கோபமும் தாமத குணத்தி லிருந்துண்டாகவேண்டும். ஆதலால் சிவபெருமான் தாமதகுணத்தைப் பொருந்தி நின்று உலகத்தைச் சங்கரிக்கின்றான். உலகத்தைச் சங்காரஞ் செய்யும்பொருட்டு மாத்திரைக் காலத்துக்குள்ளே தாமதகுணத்தைப் பொருந்திச் சங்கரிப்பனும்.

கந்தபுராணம் அனந்தன் சாபநீங்குபடலம்

நற்குணமுடையநல்லோருநாடொணுச்
சிற்குணனுருமச்சிவன்பராபரன்
சொற்குணமூவகைத்தொடாபுமில்லதோரா
நிர்க்குணனவன்செயனிகழ்த்தற்பாலதோ.

முடித்திடலியற்றுமெம்முதல்வனத்தொழி
றடுப்பரும்வெஞ்சினந்தன்னின்முற்றுமா
லடுத்தவப்பான்மையாலதன்கட்டாமதம்
படுத்தினனத்திறம்பலருந்தேர்வரால்.

இமையவராயாவருமிறைஞ்சுங்கண்ணுதல்
விமலனன்றிறுதியைவிளைக்கும்பண்பினாற்
றமகுணனென்றியத்தன்மைசெய்கையா
லமைகுணமியற்குணமறியற்பாலதோ.

**வேதாகம புராணாதிகள் சிவனைத் தாமதகுணத்த னென்றதற்குக் காரணம் கூறுகின்றது.**

சிவன் தாமதகுணத்தைப் பொருந்தி உலகங்களைச் சங்கரிக்கின்றார் ஆதலால், வேதாகமபுராணங்களாலும் அறிஞர்களாலும் சிவபெருமானைத் தாமதகுணத்த னென்றே துதிக்கப்பட்டது. இது வன்றி வேறொன்றினாற் றாமதத்தன் றென்க.

கந்தபுராணம் அனந்தன் சாபநீங்கு படலம்.

ஈறுசெய்முறையினையெண்ணித்தாமதங்
கூறினரல்லதுகூறிக்கொண்மேலையோர்
வேறொருசெய்கையின்விளம்பினாரல
ராறணிசெஞ்சடையமலனுக்கரோ.

**தாமதகுணம் சிவனுக் கியற்கை அன்றென்பதற்குத் திருட்டாந்தம்.**

சிவபெருமான் தாமதகுணத்தனே ஆயின் அளவிறந்த வேதங்களையும் ஆகமங்களையும் உண்டாக்கிக் கல்லால நிழலின்கண்ணிருந்து சனகர் முதலாகிய இருடிகளுக்கும் நந்திமுதலாகிய

ணநாதர்களுக்கும் அவ்வேதாகமங்களின் பொருளை ஓதுவாரா ! நின்மல தேசிகியென்கின்ற நாமத்தைப் பொருந்துவாரா ! நான்கு வேதங்களும் அச்சிவனை நோக்கி மூலமென் றழைக்குமா !

திருவாய்மொழி.

நெறிவாசமுனேயாய்நின் முனையைந்து
பொறிவாசற்பொறக்கதவஞ்சாத்தி - யறிவானு
டாலமரநீழலறநால்வாக்கன்றுரைத்த
வாலமமாகண்டத்தான்.

கந்தபுராணம் அனந்தன் சாபநீங்குபடலம்.

மாமறையளட்பிலாவரம்பிலாகமந்
தோமறவுதவியோாதொன்மூரத்திடைக்
காமருமுனிவராகனைங்கட்கன்னவை
தாமதகுணத்தவேற்சாற்றவல்லதோ.

வாலியநிமலமாம்வடிவங்கண்ணுதன்
மேலவனெய்துமோவேதம்விஞ்சையின்
மூலமென்றவனையேமொழியுமோவிது
சீலமில்லாக்கெவன்றேற்றும்வண்ணமே

கந்தபுராணம் உண்மைவருபடலம்.

தோமிலாகமஞ்சுருதிசெப்பியே
யேமவிஞ்சைகட்கிறைவனுகியே
நாமறும்பொருளைல்குமெந்தையைத்
தாமதனென்னச்சாற்றலாகுமோ.

## சிவபெருமானாலே அன்றிப் பிரமவிட்டுணுக்களாலே சங்காரகிருத்தியம் நடவாது.

சிவபெருமானிலிருந்து பிரமனும் விட்டுணுவும் அதிகரோ ஆயின் குறைந்த சிவபெருமானால் சங்கார கிருத்தியம் நடவாது. பிரமன் சிருட்டித்தொழிலிலும் விட்டுணு திதித்தொழிலிலும் நிலைத்து நிற்பார்களே ஆயின் சிவபெருமானாலே எவ்விதமாகச் சங்காரத்தொழில் நடக்கும். பிரமா விட்டுணுவாகிய யிருவரிலும் உயர்ந்தோனாகிய சிவபெருமானாலே சங்காரத் தொழில் நடத்தப்படவேண்டும்.

### கந்தபுராணம் உமைவருபடலம்.

ஆனவச்செயலழிவிலாததோர்
ஞானநாயகற்கன்றிடாமெனு
மேனையோர்களாலியற்றலாகுமோ
மேனகாவலும்விதியுமென்னவே.

### சிவஞானசித்தியார்.

இறுதியாங்காலந்தன்னிலொருவனேயிருவருந்த
முறுதியினின்றொன்னிலிறுதிதானுண்டாகாதா
மறுதியிலரனேயெல்லாமழித்தலாலவனாலின்னும்
பெறுதுநாமாக்கநோக்கம்போதிகாரணத்தாலே.

## விட்டுணுவினாலே பிரமனுண்டாயினன் அன்றென்பது.

விட்டுணுவினாலே பிரமன் சிருட்டிக்கப்படுவானே ஆயின், பிரமன் நானே பரமென்றகங்காரங்கொண்டபோது சிவனாலே ஏவப்பட்ட வயிரவரினால் அப்பிரமன் றலைசேதிக்கப் பட்டது. விட்டுணுவினாலே பின்பும் அத்தலை யுண்டாக்கப்படவேண்டும். பின்பும் விட்டுணுவினாலே பிரமன்றலை உண்டாக்கப்படாததினால் அப்பிரமன் சிவனாலே உண்டாக்கப்பட்டவன் என்றெண்ணுக. இதுவன்றிப் பிரமனாலே சிவன் சிருட்டிக்கப் பட்டானென்று வயிணவர்கள் கூறுவது வாய்மதத்தினாலென் றெண்ணுக.

### சிவஞானசித்தியார்.

அயன்றனைப் பயந்தானென்று மரியயன் சிரஞ்சேதிப்பப், பயந்திடான் றலைமாறானும் படைத்திடான் சிரத்தைக்கிள்ளுஞ், சயந்தரு மரனைத்தந்தான் யயனென்கை தப்பேயன்றோ, தியங்கிடா துணரூயெல்லாஞ் சிவன் செய லென்றுதேர்ந்தே.

### கூர்மபுராணம் வயிரவன் பலியேற்ற அத்தியாயம்.

முன்னைமெனது நுதனுப்ப ணுதித்தநீயோ முதல்வனெனப,் பின்னும் வெகுண்டு கூறுதலும் பிள்ளைப்பிறைதாள்'

மவுவிப், பொன்னங் குடுமிவளை குளைத்தபுனி தனகாரி, முகனேக்க, வன்ஞே ணிடக்கை நகநுதியான் மூலரோன ஞ்சாங் தலையகழ்ந்தான்.

முக்குணவியல் முற்றும்.

## போலிச்சைவ மதகண்டனவியல்.

### உருத்திரனையும் பசுவெனக்கூறும் போலிச் சைவனைக் கண்டித்தல்.

போலிச்சைவனே! ஆண்டிமகன் ஆண்டியே ஆயின் அளவறிந்து சங்கூதுவான் தனக்கடா ச்சிங்களந்தன் பிடரிக்குச் சேதமென்றாற்போல சைவமணஞ் சிறிதேனும் வீசப்பெருத நீ ஸ்சை வத்தை நிலைநாட்டப் புகுந்ததை ஆராய்ந்து பார்க்கின் மிக ஆச்சரியமாகவே யிருக்கின்றது.

"இறைநிலமெழுதுமுன்இழையபாலகன்
முறைவளாவேனெனமுயல்வதொக்கும்"

நீயோவென்றால் வேதாந்த சித்தாந்த புரா ணுதிகளைக் கிரமப்படி யோதி யுணர்ந்தவனன் று; அவைகளை ஓதுதற்குப் புறம்பாகவே யுள்ள வன் இதுவன்றிச் சிவசத்திகளில் ஒருசத்தியாகி ய விட்டுணுவைத் தூஷித்தால் சிவனுக்கு மகத்

துவ முண்டாகுமென்றெண்ணி நீயெழுதிய விட்டுணுதூஷண புத்தகங்களைக் கண்டு நான் விட்டுணுதூஷண பரிகார மென்றொரு புத்தகத்தைச்செய்து வெளிப்படுத்தினேன். அதன் பின்பு நீ யெழுதிய விட்டுணுதூஷண புத்தகங்களில் ஒரு புத்தகத்தில் விட்டுணுவைப் பசுவென்று சொல்லுதல் போதாதுபற்றிப் பதியாகிய உருத்திரனையும் பசுவென்று பிதற்றி யிருக்கின்றாய். மயிர்நரைக்கு வயித்தியஞ்செய்து கண்ணைக்கெடுத்த ஒருவனைப்போலவும், உறிதிருடவந்த அயல்வீட்டுப் பூனையைச் சர்ப்பங்கடிக்க அதனைக்கண்ட மிண்டனொருவன் அச்சர்ப்பத்தைக் கொல்லும்பொருட்டு நெருப்பை மூட்டி வீட்டினையெரிக்க அவ்வீடு வேகுவதைக்கண்டு அதனைத் தணிக்கும்பொருட்டுக் கழனிக்குள் நிற்கின்ற கருவேலமரங்களை வெட்டிவந்து நெருப்பின்மேற்போட அக்கழனியிற் பயிர்கள் கனலினால்வாட அவ்வாட்டத்தை நீக்கும்பொருட்டு ஏரியை முறித்துத் தண்ணீரைக் கழனிக்கோட்ட அவ் ஏரி தேசத்தை அழிக்கச்செய்த ஒருவனைப் போலவும் சிவசத்திகளில் ஒன்றாகிய விட்டுணுவைப் பதியாலே பிரித்துப் பாசத்தாலே கட்டத்துணிய அவ்விட்டுணு பாசத்தை அறுத்துப் பதியாகிய சிவத்தோடே பொருந்த

அப்பதியாகிய உருத்திரனையும் பசுவென்றேற் கட்டத்துணிந்ததுமன்றித் திருவாதவூரர் மே லேயும் பழியேத்தத் துணிந்த பேதாய்?

"விஷ்ணு திரிமூர்த்திகளில் ஒருவரலரோ வெ னின் திரிமூர்த்திகளும் பசுக்களேயாம். ஆகை யால் அவருள் விஷ்ணு ஒருவராகி ஏனை யிருவ ரைப்போல் அவரும் பசுவாயினரென்பது சித் தம்" என்றாய் பாவி.

திருவாசகம்.

தேவர்கோவறியாததேவதேவன்
செழும்பொழில்கள்பயந்துகாத்தழிக்குமற்றை
மூவர்கோனாய்நின்றமுதல்வன்மூர்த்தி
மூதாதைமாதாளும்பாகத்தெந்தை
யாவர்கோனென்னையும்வந்தாண்டுகொண்டான்
யாமார்க்குங்குடியல்லோம்யாதுமஞ்சோ
மேவினுமவனடியாரடியாரோடு
மேன்மேலுங்குடைந்தாடியாடுவோமே.

இத்திருவாசகத்தினையே பிரமாணமாகக்கொ ண்டு பிரமன் விட்டுணுவாகிய இருவரைப் பசு வென்று சொல்வது போதாததுபற்றிப் பதியாகி ய உருத்திரனையும் பசுவென்றாய். உணர்விலி.

திரிமூர்த்திகளுந் தலைவரரகார் எனபது அவர் கள் பதியாகா தொழியவே பசுக்களென்பது

.வியக்தம் என்று வாயிலே வந்தபடி உளறினாய்.
திருவிளை.

இரட்டைப்புலவர்.

மூவர்முதலாமுதல்வனையுமூவுலகிற்
சீவராசிறப்பாரட்டங்களையும்- தேவாக
ஒக்கநினைவார்க்கல்லவேவோரேழு
மிக்கநரகம்விதித்தது.

இவ்வகையே ஆன்றோர்கள் கூறிய சிவத்துதிகளைப் பிரமாணமாக்கி, நீ பூர்வசைவனாகவே வர நினைக்கின்றாய், நீ பூர்வசைவனே ஆயின் பிரமன் விட்டுணுவாகிய இருவரைப் பசுவெனக் கூறி அஃது போதாதுபற்றிப் பின்பு உருத்திரனையும் பசுவெனவே கூறாய் கபடி.

"திரிமூர்த்திகளி லொருவராகிய உருத்திரமூர்த்தியையே சைவர்கள் தங்கள் தெய்வமென்று எண்ணியிருப்பதாக ஐயங்கார் சொப்பனங்கண்டிருந்த மயக்கவுணர்ச்சியே. ஆவர் திரிமூர்த்திகளில் விஷ்ணு ஒருவர் எனச் சாதிக்கப் போந்ததற்குக் காரணம் இந்திரன், பிரமன், விஷ்ணு, உருத்திரன் முதலாயினோரைத் தலைவர்களாகாவொன எங்கள் ஸ்ரீ வாசப்பெருமான் பிரதிஷேதித்து உண்மைப்பொருளை இனிது விளக்கிய
— — ரிய யாம்நாடி விஷ்ணுவையும் இராம

கிருஷ்ணாதிகளையும் பசுவென்று முழங்குகிறோம்" என்றாய் கொடியபாவி?

நீயே கோவிந்தன் என்கின்ற விட்டுணு நாமத்தைப் பெற்றுத் திருமண்ணிட்டு அட்டாக்கரஞ் செபித்தபோது, எங்கள் ஸ்ரீ வாசிப்பெருமானென்று மாணிக்கவாசகரை உரிமை சொல்கின்றனையா நீயே விட்டுணுபத்தனாகவே யிருந்து அவ்விட்டுணுவைப் பசுவென்று தூஷித்து நீக்கி உருத்திரமூர்த்தி பத்தனாகவே வந்து, அவ் வுருத்திரமூர்த்தியையும் பசுவென்று தூஷித்து நீக்கிச் "சிவனையும் உருத்திரனையும் வேறாகப் பிரித்துச் சிவபத்தனாகவேவர நினைக்கின்றாய், அச்சிவனையும் பசுவென்று தூஷித்து நீக்கிப் பின்பு நீ எச்சமயதேவனைத் தேவனென்றெண்ணிப் புகநினைக்கின்றாய் கொடியபாவியே, தேவதூஷணஞ் செய்வதற்குப் பாதிரிகளும் வயிணவர்களும் உனக்கீடல்லவே பேதாய்.

**போலிச்சைவன் காட்டிய திருவாசகத்தின் உருத்திரனைப் பதியென்று கண்டது.**

பாவி நீயே பிரமாணமாக்கிய திருவாசகத்திலே "மாதாளும் பாகத்தெந்தை "என்றது கயிலாயத்திலே எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீகண்ட உருத்திரனையென் றுணராமல் திருவாதவூரர் மேலே பழியையேற்றுகின்றாய். இரட்டைப்புல

வா "மூவாமுதலா முதல்வன்" என்று துதித்தது உருத்திரனை யென்றுணராமல் அவர்மேலும் பழியை யேற்றினாய் பாவி.

**உருத்திரனென்கின்ற பதப்பொருள்.**

ஆணவம், மாயை, கன்மம், மகாமாயை, திரோதை ஆகிய இப்பாசகங்களாற் கட்டுண்டு பிறப்பு இறப்பாகிய துன்பசாகரத்திலே வீழ்ந்து; பிரமனாலே சிருட்டிக்கப்பட்டும், விட்டுணுவினாலே திதிக்கப்பட்டும் வருந்துகின்ற சீவர்களை இளைப்பாற்றும்பொருட்டுச் சங்கார கிருத்தியம் சிவனாலே நடத்தப்பட்டது. அதுபற்றிச் சிவனுக்கு உருத்திரனென்றும், சீவருக்கு இன்பத்தைக் கொடுத்தலால் சங்கரனென்றும் நாமம் உண்டானது. இக்காரண நாமத்தை யுணராய் பாவி.

சூதசங்கிதைபுராண வரலாறுரைத்த அத்தியாயம்.

அம்பைதன்சமேதனாகியமைதலாற்சாம்பனென்றும்
அம்புயிாந்துயரந்தீாக்கும்விதத்துருத்திரனேயென்றும்
புறச்சுகத்தைச்செய்யும்பண்பாற்சங்கரனேயென்றும்
மப்புடைத்திருநாமங்கொண்டயகட்பெருமான்றன்னை

**கந்தபுராணம் ததீசியுத்தரப்படலம்.**

**மூன்னுலகுட்பட்டோர்யாரையுமெடுக்குமீரா, லு**
**ன்னரும்பரமமூர்த்தியுருத்திரனெனும்பேர்பெற்று, னன்**

னவன்றரவந்தோக்குமடியடைந்தோக்கும்னு, றன்
னுருவெய்திஞோக்குஞ்சாந்ததாலவன்றனிட்டேர்.

**பஞ்சகர்த்தாக்களின் தன்மைகூறுகின்றது.**

உருத்திர மூர்த்தியென்று நீயே தூஷிக்கப் கப்பட்ட அவன் உயர்ந்த பரம்பொருளாய் யுள் ளவன் அவனுக்கு மேலாகவும் ஒப்பாகவும் ஒரு தெய்வங்களுமில்லை, அவன் எக்காலமும் சிதம் பரம் மதுரை முதலான மகிமையான க்ஷேத் திரங்களிலும் பிரமன்முதலாகிய தேவர்களின் யுள்ளும் நின்று விண்டுமுதலாகிய தேவர்கள் தரிசிக்கும் பொருட்டும் பஞ்ச கிருத்தியம் நட த்தும் பொருட்டும் நின்று நிருத்தஞ் செய்கின் றவன். தன்னுடைய அருளே திருமேனியாக வுடையவன். பிரமனுடைய இருதயத்திலே யிரு ந்து அப்பிரமனைக்கொண்டு யுலகங்க ளெல் லாவற்றையுஞ் சிருட்டிப்பிக்கின்றவன். விட் டுணுவினுடைய இருதயத்திலேயிருந்து அவ் விட்டுணுவைக்கொண்டு பிரமனாலே உண்டாக் கிய உலகங்க ளெல்லாவற்றையுங் காவல் செய் விக்கின்றவன், உருத்திரனுகவேயிருந்து அவ் லகங்க ளெல்லாவற்றையும், பிரமனையும், விட் டுணுவையுஞ் சங்கரிக்கின்றவன். மகேசனுகவே யிருந்து சீவர்கள் பிறந்திறந்து திரிகின்றவிளைப் பை ஆற்றுகின்றவன். சதாசிவனுகவேயிருந்து

பக்குவப்பட்ட சீவன்களுக்கு அனுக்கிரகஞ் செய்கின்றவன். இவ்வைந்து தொழிலினையுடைய பஞ்சகர்த்தாக்களுள், உருத்திரன், மகேசன், சதாசிவன், ஆகிய மூவரும், சுத்ததத்துவங்களென்றும், சிவனுடைய சுதந்தர வடிவங்களென்றும், நித்தமென்றும், கூறுவர். பிரமனும், விட்டுணுவும், கலை ஆதிதத்துவங்களாற் கண்டிக்கண்டவரென்றும், பரதந்திரரென்றும், அனித்தரென்றும் கூறுவர்.

கந்தபுராணம் ததீசிப்படலம்.

உருத்திர மூர்த்தியென்போ னுயாபரம பொருளாயுள்ளே, நிருத்தமதி யற்றுகின்ற நித்தனு மவன்றன் பொற்றுள், கருத்திடை நினைந்தோ ரனனுன் காயமுந் திருப்பேயூதானும், பரிப்பரா லனையலெல்லை பகர்ந்திடி னுலப்பின் றுமால்.

ஷை ததீசி யுத்தரப்படலம்.

நிலவுகின்றதன்னருளுருக்கொண்டிடுநிமலன்
றலைமைபெற்றிடுபுங்கவாதம்மைமுன்றந்தே
யுலகமயாவையுமளித்தருள்செய்திடவுதவி
யலகிலாவுயிராயாவையுமயன்கணின்றளிப்பான்.

மாயவன்கணின்றவையெலாம்போற்றிமற்றவைக்குத்
தூயதப்புரவருத்தியேமேல்வினைதொலைச்சி
பரியவற்றிலோர்பற்பலவீடுறவருளி
மேயவாருயிருலகெலாம்பின்னரோவீட்டும்.

சிவஞானசித்தியார்.

வித்தையோடீசாசாதாக்கியஞ்சத்திசிவங்களொத்துஞ்
சுத்ததத்துவஞ்சிவன்றன்சுதந்தரவடிவமாகு
நித்தமென்றுரைட்டாகாலநீங்கியநிலைமையாலே
வைத்திலாமுற்பிற்பாடுவெருவித்தா கருமத்தாலே

**அறிவிலிகள் சிவனை அறியார்.**

சிவபெருமானுடைய உருவங்களும், குண: களும், அறிவுகளும், செய்கைகளும், கரங் கால் முதலாகிய சாங்கம் உபாங்கம் பிரத்தியாங்கங் களும் அருளே ஆம். இவ்வுருவங்களை அறியா தார் தேவர்களிலிவரு மொருவரொன்பர். உலகி றந்தபின் னிவ்வுரு விறவாததையும், இறந்தவுல கிவ்வுருவினின்று தோன்றிப் பின் னிவ்வுருவி னொடுங்குகின்றதையும் உலகி னுயிர்கட் குயிரு மாகி யுலகுமாகி நின்றதையும், மூவராய் நின்ற தையும் பாதியுருவம் பெண்ணாகி நின்றதையும், அரிபிரம னறிதற் கரிதாய் நின்றதையும், போ கியாயிருந் துயிர்க்குப் போகத்தைக் கொடுக் கின்றதையும், யோகியாயிருந் துயிர்க்கு யோக முத்தி கொடுக்கின்றதையும், கோபித்துக் கொ டியவினையைப் போக்குகின்றதையும், ஒன்றோ டொன்றொவ்வா வேடங்களெடுக்கின்றதையும், இவ்வேடங்களெல்லா மருளின் காரணமென் கின்றதையும், சங்காரமும் வினைகளைச் சங்கா

ரஞ் செயகின்ற தென்றதையும், உருவ முழு தும் ஒளியென்றதையும், பெண்ணைப் புணர்ந் துயிர்களுக்குப் பேரின்பத்தைக் கொடுக்கின்ற தையும் அறியார் கல்வி கேள்விகளில்லாத மூ டர்.

## சிவஞானசித்தியார் சுபக்கம்.

உருவருள்குணங்களோடுமுணர்வருளுருவிற்றோன்றுங்
கருமமுமருளரன்றன்கரசரணாதிசாங்கந்
தருமருளுபாங்கமெல்லாந்தானருடலக்கொன்றின்றி
பருளுருவுயிருக்கென்றேயாக்குவனமலனன்றே.

உலகினையிறந்துநின்றதரனுருவென்பதோரா
ருலகவனுருவிற்றோன்றியொடுங்கிடுமென்றுமோரா
ருலகினுக்குயிருமாகியுலகுமாய்நின்றதோரா
ருலகினிலொருவனென்பருருவினையுணராரெல்லாம்.

தேவரிலொருவனென்பர்திருவுருச்சிவனைத்தேவர்
மூவராய்நின்றதோராராமுதலுருப்பாதிமாத
ராவதுமுணராராதியரியயற்கறியவொண்ணு
மேவருநிலையுமோராரதனுருவிலைவுமோரார்.

போகியாயிருந்துயிர்க்குப்போகத்தைப்புரிதலோரார்
யோகியாயோகமுத்தியுதவுதலதுவுமோரார்
வேகியானறபோற்செய்தவினையினைவீட்டலோரா
ரேகியாமூடரெல்லாமும்பரிலொருவனென்பர்.

ஒன்ருடொன் றெவ்வாவேட மொருவனே தரித்துக் கொண்டு, நின்றலா லுலகுநீங்கி நின்றன னென்றுமோரா, ரன்றியவ் வேடமெல்லா மருள்புரி தொழிலென் ருேரா, கொன்றது வினையைக் கொன்று நின்றகுணமென்ருேரார்.

நாயகன்கண்ணயட்டாறுயகிபுதைப்பவெங்கும்
பாயிருளாகிமூடப்பரிந்துலகினுக்குநெற்றித்
தூயநேத்திரத்தினலேசுடரொளிகொடுத்தடன்பிற்
றேயமாரொளிகளெல்லாஞ்சிவனுருத்தேசதென்ருர.

கண்ணுதலியோகிருபடக்காமனின்றிடவேட்கைக்கு
விண்ணுறுதேவராதிமெலிந்தமையோராராமாறு
னெண்ணிவெண்மதனையெவவெரிவிழித்திமவான்பெற்ற
பெண்ணினைப்புணாந்துயிாக்குப்பேரின்பமளித்ததோரார

படைப்பாதி தொழிலும்பந்தாக் கருளும்பா வனையு நூலு, மிடப்டாக மாதராரோ டியைந்துயிாக் கின்பமென்று, மடைப்பாறு மதுவுமுத்தி யளித்திடு மியோகும் பாசந், துடைப்பாறுந் தொழிலுமேனி தொடக்கானே ற சொல்லொணதே.

## துர்க்தணரிடத்து நூல் கேட்கலாகாது.

சிவதூஷணம் முதலான பாவங்களைச்செய் கின்ற பாவிகளிடத்தும், நிலை, உறுதி, ஆசாரம், ஒழுக்கம், சீலம், நடுநிலைமை, அறிவு, கருணை,

தவம், ஆதியாகிய நன்மார்க்கத்திலே நில்லாத பாவிகளிடத்தும், கொலை களவு கள்ளு காமம் முதலாகிய கொடியபாவத்தையே தவமாகவெண்ணிச் செய்கின்ற பாவிகளிடத்தும் வேதசிவாகம புராணாதிகளைக் கேட்க வொண்ணாது. அப்பாவிகளிடத் துண்டாகிய கல்வி ஆனது புலையர்கள் வாழ்கின்ற தெருவிற் பொருந்திய பொல்லாத அசுசிநிறைந்த கும்பிக் கருகிலுள்ள குழியிலே பூத்த நீலோற்பலமலர் போலாம்.

சிவஞானதீபம்.

நிலையுறுதி யாசார மொழுக்கஞ்சீல நிறையறிவு கருணை தவ நெறியிலாமற், கொலைகளவு கட்காம முதலாயுள்ள கொடும்பவமே தவமாகக் கொள்ளுந் தீயோ, ருலகிலருஞ் சிவனருணூ லோதலாகா தோதினுமங் கவருணாகொள் ளொணாது நீலம், புலையாமரு விடுந்தெருவிற் பொல்லாக் கும்பி பொருந்தியிடுங் குழியதனுட் பூத்ததாமே.

பௌலிச்சைவ மதகண்டனவியல் முற்றிற்று.

## வயிணவமதகண்டனவியல்.

---

அனேக சென்னங்களிலே மகாபாதகம் முதலானவற்றைச் செய்கின்ற கொடிய பாவிகள்

கிய வயிணவர்களுக்குக், கரியதேகத்தையும், மயக்கத்தையும், வஞ்சகத்தையுமுடைய நாராயணன் பரமெனவே தோன்றுவன். அக்கொடிய வயிணவருக்குச் சிவபெருமான் முதன்மையுடைய னெனவே சற்றுந்தோன்றான்

## சூதசங்கிதைவேதார்த்தத்தையுரைத்த அத்தியாயம்.

எண்ணில்பாதகம்பவந்தொறுமீட்டினோக்கிருளே
யுண்ணிலாவதிற்பவாக்குடற்கரியமாமாயன்
மண்ணுடைச்சருவாதிகளுய்யெங்கிடுவான்
றண்ணிலாமுடியோன்பொருளாய்த்தயங்கிடானுல்.

## சேந்தனார் திருவிசைப்பா.

கற்றவா விழுங்குங் கற்பகக் கனியைக் கறையிலாக் கருணைமாகடலை, மற்றவரறியா மாணிக்கமலையை மதிப்பவர் மனமணி விளக்கைச், செற்றவாபுரங்கள் செற்றவெஞ்சிவனைத் திருவீழி மிழலைவீற்றிருந்த, கொற்றவன் றன்னைக் கண்டுகண்டுள்ளங் குளிரவென் கண்குளிர்ந்தனவே.

## இலிங்கபுராணம் அம்பரீடனே யாழிகாத்த வத்தியாயம்.

இன்றுதொட்டுமாமையிக்கியற்றிடுமாலைச்
சென்றுபோற்றுதறீதெனவொழிந்துதேன்பிலிற்றுங்
கொன்றைவேணியன்குரைகழற்கன்புபூண்டேயர்ந்து
மன்றுமாதவரிருவருமாசறவுறைந்தார.

## வயிணவநற்பத்தி கூறுகின்றது.

பிரமனும் விட்டுணுவும் இந்திரன் முதற்றே வரும் ததீசிமுதலான முனிவர்களும் பூமியின் கண்ணுள்ள பிராமணர்களுங் கூடியசபையிலே தக்கனென்பவன் செருக்குற்றுப் பிரமன் விண்டுவாகிய இருவர்களைப்போலவே சிவனும் ஒரு தொழிலை யுடையவன். இச்சிவன் பிரமன் விட்டுணுவாகிய யிருவரில் அதிகனல்லன். ஆதலால், அச்சிவனுக்குக் கொடுக்கின்ற முதற்பாகத்தை விட்டுணுவுக்கே கொடுப்பேனென்று அனேக சிவதூஷணஞ் செய்தான். அதனைக்கேட்ட, ததீசிமுனிவர் அவ்விடமிருந்து சிவதூஷணத்தைக் கேட்ட பிராமணரை நோக்கி நீங்கள் சிவனையும் சிவனடியார்களையும் திருநீற்றையும் கண்டிகையையும் நிந்தனைசெய்து பூமியிலே பிராமணராகவே பிறந்து பிறப்பையும் இறப்பையும்பெற்று ஆணவம் மாயை கன்மம் மகாமாயை திரோதை ஆகிய பஞ்சமலங்களினாலே கட்டுண்டு, வேத சம்மதமில்லாத வைகானசம், பாஞ்சராத்திரம் ஆகிய தீநெறியில் அடையக் கடவீரொன்று சபித்தார். அன்று தொட்டின்று காறும் சிவசமயத்துக்குப் புறம்பாகியே சிவனையும் சிவனடியார்களையும், வேதசிவாகம புராணங்களையுஞ் சிவ சின்னங்களையும் நிந்தனைசெய்துவருகின்றார்கள்

கந்தபுராணம் அனந்தன் சாபம் நீங்குபடலம்.

பேசரிய மறைகளெல்லாம் பராபரனீ யென்வணங்கிப் பெரிதுபோற்று, மீசனையு மன்பனையு நீறருங்கண் டிகையினையு மிகழ்ந்துசீவிர, காசினியின் மறைவரா யென்னாளும் பிறந்திறந்து கதியுறாது, பாசமத மிடைப்பட்டு மறையுளையா நெறியதனிற் படுதிரொன்றான்.

உபதேசகாண்டம் சிவத்துரோகிக ளெய்தும் நரகவேதனைச் சருக்கம்.

எடுத்தசீறநத்ததிசியிருந்தவ
னெடுக்கில்பூதியுருத்திராமாமணி
தடுத்தணிந்திலிரொன்றிடுசாடசீா
விடுத்துணாந்தில்லீரின்னும்விடுத்திரோ.

ஆங்கவன்சொலுமன்றுதொட்டின்றள
வோங்குதன்டொருமூன்றுன்றெடுத்தசீர
தாங்குகங்கைச்சடைமுடிப்புங்கவன்
பூங்கழறகயலாப்புறம்போயினீர.

கவுதமருடைய சாபத்தினலே வைஷ்ணவர்கள் நெற்றி முதலாகிய விடங்களிலே மண்ணிட்டனர்.

கவுதம னென்கின்ற திருநாமத்தை யுடையவரும், சிவசின்னங்களாகிய விபூதிகண்டிகையினை அணியப்பெற்ற திருமேனியை யுடையவரும்

பஞ்சாட்சரத்தை நாவினாற் பத்தியோடு செபித்துவருகின்றவரும், சிவபத்தியிலே சிறிதேனுந் தவறாப் பெருந்தவருமாகிய அம் முனிவரைக் கண்ட சிலமறையோர் செருக்குற்று நிந்தைசெய்ய; அதனைக்கேட்டு அம்முனிவர் கோபங்கொண்டு அவர்களை நோக்கி சிவவேடத்தோடு வந்தவென்னைச் சிறிதும் மதியாமல் நிந்தை செய்ததினால் கீழ்மையுடைய மண்ணை நெற்றிமுதலான இடங்களிலேயிட்டு சிவனையும் அவனடியாரையும் அச்சிவசின்னங்களாகிய விபூதி கண்டிகையையும் நிந்தைசெய்து நரகிலே போகக் கடவீர்க ளென்றார். அவர்கள் தான் அந்தணரல்லாத மற்றச்சாதியிலே தோன்றி அன்று முதலின்றுகாறும் சிவநிந்தை சிவனடியார் நிந்தை வேதாகம புராணநிந்தை சிவசின்ன நிந்தைசெய்து வருகின்ற கொடிய பாவிகளும் மண்ணை நெற்றிமுதலான இடங்களிலே தீட்டி வருகின்றவர்களுமாம்.

விருத்தாசலபுராணம் விபூதிச்சருக்கம்.

கவுதமனைநிந்தைசெய்தகாதன்மறையோரைத்
தவராவாசபித்தபடிதாழ்வுறுமண்ணிட்டுச்
சிவனைப்பவனீற்றையருள்சேர்ந்தவடியாரைப்
புவனிதனினிந்தைசெய்துபோம்நரகிலென்றா

## ததீசி கவுதமர்சாபம் பலித்துநின்றது.

சைவாகமங்களாலும் சிவபுராணங்களாலும சிவனடியார்களாலும் விட்டுணுவை நிந்தைசெய்யக் கண்டிலேம். ஆதலாலும், விட்டுணு வென்பவர் சிவன்கொண்ட நால்வடிவின் ஒரு வடிவினை யுடையனென்றும், பராசத்தி காளி கௌரி ஆகிய மூன்று சிவசத்திகளுடனே விட்டுணு நாலாவதாகிய சிவசத்தி யென்றும், சிவனடியார்களுள் முதலடியா னென்றும், விட்டுணுவைப் பூசிக்கவேண்டு மென்றும், சைவாகமங்களிலும் சிவ புராணங்களிலும் விதித் திருத்தலாலும், அவ்விட்டுணு சைவர்களாலே நிந்திக்கப் பட்டவரல்லர், வயிணவர்கள் அவ்வாறின்றிச் சிவன் கோயிலையும் சிவலிங்கத்தையும் சிவாகமம் சிவ புராணங்களையும் சிவ சின்னங்களாகிய விபூதி கண்டிகையினையும் சிவனடியார்களையும் கண்டவுடனே ஒருகாரணமின்றித் தூஷிப்பது ததீசி கவுதமர் முதலாகிய மகா தவத்தினையுடைய முனிவர்கள் சாபமே ஆம் பிறிதொன்றன்று.

திருவிளையாடற்புராணம் விருத்தகுமார பாலரானபடலம்.

இல்லார்க்குக் கிழியீடு கோடட்டா லெனப்பல்லா ரில்லந்தோறுஞ், செல்லாகின் றிரந்துண்டு திரிந்தமைநீ மறமகனுய்ச் செல்வநல்க, வல்லானை மணந்துவரு வான்போ

ற்றம மனைபுகுத வங்கட்சிலப், டொல்லாராய் வைணவத் துட் புக்கொழுகு தாய்தந்தை பொருளாகளாகி.

வந்தமணவாட்டி சிவசிந்தனையுஞ் சைவதவ வடிவுநோக்கி, வெந்தவுடல் டோன்மனமும் வெந்தவனை வேறொருதுக்கி வேண்டாராகி, சிந்தனைசெய் தொழுகுவார வனையொருவா ணீத்துநீங்கி வேறநூராந், தந்தமாமங் கலங்காண்டார தனியேயைந் தகம்பூட்டித் தாங்கள்டோனார்.

உண்மாசுகழுவுவது நீறென்றே யுடம்பிடத முனைட்டக் கேட்டு, மண்மாசு படப்பூசும் வடிவுடையா ரகன்றதற பின் மனையில்வைகும், பெண்மாசு கழியவொரு சிவனடி யார தமைக்காணப் பெறுமலின்றென், கண்மாசு படுவ தெனக் கனிந்தொழுகு தலையன்பாற கவலைகூர்வாள்.

## வயிணவரைக்காணுதல் தீதென்றது.

சிவதூஷணஞ்செய்த தக்கனைக்கண்ட தேவர்களுக்கும் பிராமணருக்கும் வந்து சம்பவித்த தீங்குபோலவே அவ் வயிணவரைக்கண்டு அவர்களோ டுண்டுடுத்து மனமகிழ்ந் திருந்தார்க்கு முண்டாகும். அவ்வயிணவர்களோ டிணங்கி யிருந்தார்கள் வேறொரு பாவங்கள் செய்யவேண்டியதில்லை. அவர்களை இருபத்தெட்டுக்கோடி நரகிலே அப்பாவமானது குடியேற்றும். விபூதி கண்டிகை பூணாத பாவிகளைக்கண்டு அவர்களோ டிணங்கியிருந்தால் ஞமலியை வளர்ப்பவர்களா

ந்தால் அவ்வவரசனும் ஒருபயனைப் பெறுவாரு முண்டோ! அதுபோலச் சிவனைக்கண்டு அச்சிவனுடைய எவற்றொழில்பூண்ட விட்டுணுபுகழைச் சொல்லித் துதித்தால் அதோகதி அன்றிச் சிவகதியுண்டோ.

## கூ-சங்கிதை வேதார்த்தமுறைத்த அத்தியாயம்.

மாசுசேறவிட்டகுருநாலிபோராநாமத்தநாள்வெண்டு
ஆசுகொண்டுமையாளந்திருமூலநாதநேத்திரமொழியின்
வீசுநீராசத்திடைவிழ்வராய்வினைந்து
பேசிவ்வெந்துரோசுபாசமுப்பமறிக்கிவொரப்புவுடோ.

## சிவனுக்குவிட்டுணு சத்தியென்றது.

விட்டுணுவானவர் தான் சிவசத்தி வடிவென்பதை வயிணவர்கள் அறிந்து வயிணவ சமயமாகிய படுகுழியின்கண் நின்று நீங்கிச் சிவபெருமானை வணங்கி உய்யும்பொருட்டும் அசுரர்களைக் கொலைசெய்து சுரர்களுக்கு அமுதமுண்ணக் கொடுக்கும் பொருட்டும், பெண்வடிவாகி அசுரர்கள் பக்கலிற் சென்று அவர்களை மயக்கி ஒருவரோடொருவரைச் சண்டைசெய்யும்படி செய்து அவர்கள் யாவரையுங் கொலைசெய்து அதன்பின், சிவபெருமான் பக்கலிற்சென்று பத்துமுதலாகிய பற்பல ஆடல் பாடல்களைச் செய்து தனது தேகத்தின் கண்ணுண்டாகிய

பொருந்தி மூன்று மூர்த்தி ஆகி முத்தொழிலைச்
செய்து நிற்றலால், பிரமன், விட்டுணு, உருத்
திரனாகிய மூவரையும் ஒருவனென்றெண்ணி
யனங்கென்று விட்டுணுவின் ஆசாரியர்கள் கூறி
யிருக்கின்றனர். அன்றியும், சிவனுடைய நாம
த்தினைல் முக்கண்ணப்பனென்று விட்டுணுவை
த் துதித்திருக்கின்றார்கள். இச் சிவதூஷணபரி
காரம் செய்யு முன்னமே விட்டுணுவைப் பசு
வென்று சொல்வது சுருதி அன்று அவ்விட்டு
ணு பசுவல்லர், அவர் சிவனொடொன்றா னபேத
த்தில் ஒருவரும், சிவசத்திகள் நான்கில் ஒருசத்
தியும், ஆகவே யிருத்தலால் விட்டுணுவைத்
தூஷித்தால் அது சிவதூஷணமாகவே முடிந்து
அவர்கள் சிவனடியார்களாலே நீக்கப்பட்டுச்
சிவகதி அடையார் என்று விட்டுணு தூஷண
பரிகாரத்தில் சிவாகமங்களையுஞ் சிவபுராணங்
களையும் ஆதாரமாக்கிக் கூறுகின்றேன். அது
போலவே சிவபெருமான் விட்டுணுவுக்கு நாய
கனாகவே யிருத்தலாலும், சிவபெருமான் விட்
டுணுவிலே வியாபகனாகவே யிருத்தலாலும்,
சிவதூஷணஞ் செய்கின்றவர்கள் விட்டுணுதூஷ
ணஞ் செய்தவர்களாய் வைகுந்தஞ் சேரார்கள்
ஆதலால் சிவதூஷணஞ் செய்வதை விடுகவென்
று பாரதம், இராமாயணம், பாகவதம், திரு
வாய்மொழி முதலான நூல்களின் சம்மதம்.

திருவாய்மொழிப்பாசுரங்கள்.

முனியே நான்முகனே முக்கண்ணப்பாவென் பொல்லாக்
கனிவாய்த்தாமரைக்கட் கருமாணிக்கமேயென்கள்வா
தனியேனாருயிரே யென்றலைமிசையாய்வந்திட்டு
இனிநான் போகலொட்டேனொன்றுமாயஞ்செய்யேலென்னையே

அவாவறச் சூழரியையயனை யரனையலற்றி
அவாவற்றுவீடுபெற்ற குருகூர்ச்சடகோபன்சொன்ன
அவாவிலந்தாதிகளா லிவையாயிரமும் முடிந்த
அவாவிலந்தாதியிப்பத்தறிந்தார் பிறந்தாருயர்ந்தாரே.

தாழ்சடையு நீண்முடியு மொண்மழுவுஞ்சக்கரமுஞ்
சூழரவும் பொன்னாணுந் தோன்றுமால் - சூழுந்
திரண்டருவி பாயுந் திருமலைமேலெந்தைக்
கிரண்டுருவுமொன்றாயிசைந்து.

கொண்ட மூர்த்தியோர் மூவராய்க் குணங்கள் படைத்
தளித்துக் கெடுக்கும், புண்டரீகக் கொப்பூழ் புனற்பள்ளி
யப்பனுக்கே தொண்டர், தொண்டர் தொண்டன் சட
கோபன் சொல்லாயிரத்து ளிப்பத்தும், கண்டுபாட வல்
லார் வினைபோங் கங்குலும்பகலே.

அரனாரணனாமமான்விடைபுள்ளூர்தீ
யுரைநூன்மறையுறையுங்கோயில் - வரைநீர்
கருமமழிப்பளிப்புக்கையதுவேனேமி
யுருவமெரிகார்மேனியொன்று.

